உங்கள் வங்காளி ஜடைச்சிங்காரத்தின்



அழகை பூர்த்திசெய்ய

நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேட் ட்ரேட் மார்க்

கூந்தல் தைலம் உபயோகியுங்கள்

★ இனாம்!

இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் நெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதை குறிப்பிடவும். மற்ற ஜடைச்சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப்பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.

இன்னுமொரு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்பு



ராஸ்மிக் லிமிடெட், லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

CPH 13-X30TM

# பொருளடக்கம்

மலர் 12 | இதழ் 48 — 1953 ஜூன் 14 — விஜய ௵ வைகாசி 32௳


| | | | |
|---|---|---|---|
| புதிய விநாயக புராணம்! | (தலையங்கம்) | ... | 3 |
| தகராறு தீர்ந்தது! | ... | ... | 4 |
| கொரியாக் கோணல் நிமிர்ந்தது | ... | ... | 5 |
| கொலைகாரக் கல்வி முறை! | ... | ... | 6 |
| நகரங்களுக்கும் தொடரும்! | ... | ... | 6 |
| வள்ளுவர் விருப்பம்! | (கார்ட்டூன்) | ... | 7 |
| பொன்னியின் செல்வன் | கல்கி | ... | 8 |
| வட்ட மேஜை | ... | ... | 15 |
| தமிழ்க் களஞ்சியம் | டி. கே. சி. | ... | 19 |
| திருவள்ளுவர் திருவிழா (போட்டோ) | எம். டி. கணேஷ் | ... | 20 |
| முனிவரின் சாபம் (பாப்பா மலர்) | குண்டுமணி | ... | 23 |
| சென்னையில் பிரபல திருமணம் (படங்கள்) | ... | ... | 26 |
| இமயத்தின் சிகரம் | ... | ... | 29 |
| பாவம், அத்தை! | கே. ஆர். கௌசல்யா | ... | 34 |
| மனமும் மருந்தும் | கௌசிகன் | ... | 43 |
| தாயின் உபதேசம் | எம். கே. சங்கரன் | ... | 52 |
| பாக்கியசாலி யார்? | ரா. கோ. | ... | 59 |
| கோடி கோடி நமஸ்காரம்! | ரகு | ... | 62 |
| ருமேனியா (இரும்புத் திரை) | ஜெயமணி | ... | 65 |
| கலங்கரை விளக்கம் | சோமு | ... | 69 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 46

# புதிய விநாயக புராணம்!

முன்னொரு காலத்தில் தூர்வாச முனிவர் கைலாசத்துக்குச் சென்றபோது, முன் வாசலில் வீற்றிருந்த விநாயகப் பெருமானைக் கவனியாமல் விடுவிடு என்று உள்ளே போய் விட்டார். அதைக் கண்ட விநாயகர் ஒரு வேடிக்கை செய்ய எண்ணித் தமது தும்பிக்கையை நீட்டித் தூர்வாச முனிவரின் முதுகின்பேரில் தீர்க்க சுவாசம் ஒன்று விட்டார். உடனே தூர்வாச முனிவர் அலறிப் புடைத்துக் கொண்டு தலை குப்புற விழ, அதைக் கண்டு பூத கணங்கள் எல்லாம் சிரித்தன.

தூர்வாச முனிவர் மீண்டும் எழுந்து தமக்கு என்ன நேர்ந்தது என்பதை ஞான திருஷ்டியினால் அறிந்து கொண்டதும், கோபம் அவருடைய ஜடா மகுடத்துக்குமேலே போய்விட்டது. விநாயகரைப் பார்த்து, "நீர் பூலோகத்தில் நாற்சந்திகளிலும் குளத் தங்கரை மரத்தடிகளிலும் கேட்பாரற்று வெய்யிலில் காய்ந்து கொண்டும் மழையில் நனைந்து கொண்டும் இருப்பீராக! உமக்குத் தோப்புக்கரணம் போடுவோரும், வேண்டுதல் செய்து கொண்டு தேங்காய் உடைப்போரும், கொழுக்கட்டை நைவேத்தியம் செய்வோரும் நாளுக்கு நாள் குறைந்து போவார்களாக!" என்று சாபங் கொடுத்துவிட்டுப் பூத கணங்களை நோக்கித் திரும்பினார். "நான் விழுந்தபோது சிரித்தவர்கள் அத்தனை பேரும் பூலோகத்தில் நாத்திகர்களாகப் பிறக்கக் கடவீர்களாக!" என்று சபித்த உடனே, பூதகணங்கள் நடுநடுங்கிப் போய் முனிவரின் அடிகளில் விழுந்து வணங்கி, "முனிபுங்கவரே! தாங்கள் மூக்குக்கு மேலே முன் கோபம் உடையவர் என்று தெரிந்திருந்தும், நாங்கள் சிரித்தது என்னமோ குற்றந்தான்! கருணை கூர்ந்து மன்னித்துச் சாப விமோசனத்துக்கு வழி கூறவேண்டும்!" என்று கேட்டுக் கொண்டனர்.

விநாயகரும், "தூர்வாசரே! உமக்குப் பசி எடுத்துக் கோபம் பொங்கி வந்த போதெல்லாம் பல தடவை நானாகவே உம்மை அழைத்து மோதகம் — நாளிகேரம் ஆகியவற்றில் பங்கு கொடுத்திருந்தும், ஒரு சிறிய வேடிக்கை செய்ததற்காக இப்படிச் சாபம் கொடுத்து விட்டீரே? எனக்கு ஒருவரும் பூஜை நைவேத்தியம் செய்யாமற் போனால் உம்முடைய கதி என்ன ஆவது?" என்று கேட்டார். அவ்வளவுதான்; தூர்வாச முனிவரின் கோபம் பறந்து போய் விட்டது.

"ஆமாம்; சற்று அவசரப்பட்டுத்தான் சாபங் கொடுத்து விட்டேன். ஆயினும் பரவாயில்லை. உலகில் நாஸ்திகர்களாகப் பிறக்கப்போகும் இந்தப் பூதகணங்கள் ஒரு நாள் 'மண் பிள்ளையார் செய்து உடைக்கப் போகிறோம்' என்று கிளம்பி, அவ்விதமே சில இடங்களில் செய்யவும் செய்வார்கள். உடனே, ஆஸ்திக மகா ஜனங்களும் பக்த கோடிகளும் விழித்துக் கொள்வார்கள். முன்னைக் காட்டிலும் விநாயகக் கடவுளாகிய தங்களிடம் அதிக பக்தி கொள்வார்கள். அர்ச்சனைகள், அபிஷேகங்கள், நைவேத்தியங்கள், ஆரத்திகள், அலங்காரங்கள், வீதி வலங்கள், உற்சவங்கள் எல்லாம் பதின் மடங்கு அதிகமாகவும் அமோகமாகவும் நடத்துவார்கள். அந்தச் சமயத்தில் மட்டும் என்னை மறந்துவிட வேண்டாம்!" என்று முனிவர் கூறினார்.

தூர்வாச முனிவரின் வாக்கின்படியே பூலோகத்தில் பரத கண்டத்தின் தென் பகுதியில் கலியுகம் விஜய வருடம் வைகாசி மாதத்தில் எல்லாம் நடந்தது......

மேற்கண்டவாறு விநாயக புராணத்தில் ஒரு புதிய படலம் சேர்க்கப்பட்டு வருங் காலத்தில் நம் சந்ததிகள் படித்து மகிழும்படி நேருமானால் அதில் யாரும் வியப்பு அடைவதற்கு இடமிராது. நம் நாட்டில் புராண இதிகாசங்களில் இடைச் செருகல்கள், முன்பின் செருகல்கள் முதலியவை தொன்று தொட்டு நடந்து வரும் பழக்கங்களாகும். அந்த மரபு திடீரென்று மாறிவிடும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

* * * *

திராவிடக் கழகத்தார் மிகப் பெரிய ஆர்ப்பாட்டங்கள் செய்து விட்டுப் பிறகு ஆங்காங்கே ஏதோ பெயரளவில் நடத்திய 'மண் பிள்ளையார் உடைப்பு' நிகழ்ச்சிகள், தமிழ் நாடெங்கும் அவர்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறான ஆஸ்திக உணர்ச்சியை

எழுப்பி, நாத்திகத்தில் வெறுப்பை வளர்த்து, பக்தி வெள்ளம் பெருகும்படி செய்து விட்டன.

பல்லவ சேனாதிபதி பரஞ்சோதியார் வடக்கே படை எடுத்துச் சென்று, வாதாபி நகரை எரித்து அழித்த பிறகு, அங்கிருந்து வாதாபி கணபதியை வெற்றி முழக்கத்துடன் ஊர்வலமாக எடுத்து வந்து தமிழ் நாட்டில் நிலைநாட்டினார் அல்லவா!

அந்தக் காலத்தில் தமிழ் மக்கள் விநாயகர் விஷயத்தில் காட்டிய பக்தி வெறியை இத்தனை நூற்றாண்டுகளுக்குப் பிறகு இன்று மறுபடியும் தமிழ் நாட்டில் கண்டோம்.

மூலை முடுக்குகளிலும் சந்து பொந்துகளிலும் இடிந்த கோயில்களிலும் குளத்தங்கரை ஆற்றங் கரைகளிலும் மரத்தடிகளிலும் வீற்றிருந்த விநாயகர்களுக்கெல்லாம் யோகம் பிறந்தது. அபிஷேக அர்ச்சனைகளும் உற்சவ ஊர்வலங்களும் அமோகமாக நடைபெற்றன. அறுவகைச் சமயங்களில் ஒன்றான 'காணபத்தியம்' என்னும் சமயமே புத்துயிர் பெற்று விட்டதாகத் தோன்றியது.

இவ்விதம் ஆஸ்திக உணர்ச்சி பொங்கிப் பெருகி ஓடியது குறித்து ஆஸ்திகர்கள் எல்லாரும் அளவிலா மகிழ்ச்சி கொள்வது இயற்கைதான். தெய்வத்தை எந்த உருவத்தில் தியானித்தாலும், உருவம் கடந்த பரம்பொருளையே தியானித்ததாகும் என்பது ஸநாதன ஹிந்து தர்மத்தின் அடிப்படைக் கொள்கையல்லவா! எனவே, பரம் பொருளை விநாயகர் வடிவத்தில் இத்தனை லட்சக் கணக்கான பக்த கோடிகள் ஏக காலத்தில் வழிபட்டது பற்றி ஆஸ்திக மகாஜனங்கள் மகிழ்ச்சி அடைய வேண்டியதுதானே!

# அன்பே ஆஸ்திகம்!

உண்மையான ஆஸ்திகர்கள் அவ்வளவாக மகிழ்ச்சி கொள்ள முடியாத, ஏன், வருத்தமே கொள்ளத்தக்க சில நிகழ்ச்சிகளும் நடைபெற்றதை இங்கே குறிப்பிட வேண்டி யிருக்கிறது.

திராவிடக் கழகத் தலைவரின் உருவப்படங்களைக் கொளுத்துதல், அவரைப் போல் பொம்மைகளைச் செய்து உடைத்தல், கொடும்பாவி கட்டி இழுத்தல் போன்ற செயல்கள் ஆஸ்திகத் தன்மைக்குச் சிறிதும் பொருந்தாத அநாகரிகமான காரியங்கள்.

"அன்பே சிவம்" என்பது திருமூலரின் அருள் வாக்கு. "அன்பே கடவுள்" என்னும் கருத்தை ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு விதத்தில் வலியுறுத்தி யிருக்கிறது. உலகத்தில் தோன்றிய அவதார புருஷர்கள், மகான்கள் எல்லாரும் இதே கருத்தை வெவ்வேறு விதமாக வெளியிட்டிருக்கிறார்கள். எத்தனையோ பெரியோர்கள் தங்கள் செயல்கள் மூலமும் காட்டி யிருக்கிறார்கள்.

ஆகையால் அன்பு நெறிக்கு மாறான செயல் எதுவும் ஆஸ்திகம் ஆக முடியாது. வாயினால் மட்டும் ஆஸ்திகம் பேசிக்கொண்டு உள்ளத்தில் நீசத்தனமான துவேஷத்தை நிரப்பி வைத்துக் கொண்டிருப்பவர்கள்தான், நாஸ்திகர்கள் மீது பழிக்குப் பழி வாங்க நினைத்து மேற்கூறியவை போன்ற செயல்கள் புரிவார்கள்.

உண்மை ஆஸ்திகர்களுக்கு நாஸ்திகத்தின்மீது வெறுப்பு இருக்கலாம்; ஆனால் நாஸ்திகர்கள்மீது வெறுப்பு இருக்கக் கூடாது. அந்த வெறுப்பைக் காட்டிக் கொள்ள இம்மாதிரி அருவருப்பான காரியங்களிலும் இறங்கக் கூடாது.

இவ்விதக் காரியங்கள் செய்ய வேண்டுமென்று விநாயகப் பெருமான் அவருடைய பக்த கோடிகளிடம் ஒரு நாளும் எதிர்பார்க்க மாட்டார். நாஸ்திகர்களை வேறு விதத்தில் தண்டிக்க வேண்டுமென்று கடவுள் விரும்பினால் அவரே அந்தக் காரியத்தைச் செய்து கொள்வார்.

ஆஸ்திகர்கள் தங்கள் பக்தியை வளர்த்துக் கொள்ளட்டும். ஆலயங்களில் ஆராதனை, கூட்டுப் பிரார்த்தனை, பஜனை போன்ற காரியங்களில் மனதைச் செலுத்தட்டும். நாடெங்கும் இறைவனுடைய ஆயிரமாயிரம் திருநாமங்களும் முழங்கி ஒலிக்கும்படி செய்யட்டும்.

உருவ உடைப்பு, கொடும்பாவி இழுத்தல் முதலிய அநாகரிகமான காரியங்களை நாஸ்திகர்களுக்கே விட்டு விடுவதுதான் முறை.

"அன்பே கடவுள்" என்பதை ஆஸ்திகர்கள் ஒருநாளும் மறந்துவிடக் கூடாது. அன்பு நெறியைக் கடைப்பிடிப்பதன் மூலம் ஆஸ்திகர்கள் தங்களை உயர்த்திக் கொள்வது மட்டுமல்ல; நாஸ்திகர்களையும் மனம் மாறும்படி செய்வது சாத்தியமாகும். அன்பு நெறிக்கு மாறான முறைகளைக் கடைப்பிடிப்பதினால் ஆஸ்திகத்துக்கு எல்லாவிதத்திலும் தீங்கே உண்டாகும்.

# தகராறு தீர்ந்தது!

ரோமாபுரி மகா வீரனான ஜூலியஸ் ஸீஸர் "வந்தேன்; பார்த்தேன்; வென்றேன்" என்று கூறிய மொழிகள் மிகப் பிரசித்தமானவை.

மத்திய சர்க்காரின் நிதிமந்திரி தேசமுக் சென்னை இராஜ்யத்துக்கு "வந்தார்; பார்த்தார்; வெல்லப் பட்டார்" என்று சொல்லும்படியாகக் காரியங்கள் நடந்திருக்கின்றன.

சென்ற வாரத்தில் சென்னை மா நகருக்கு நிதி மந்திரி தேசமுக் விஜயம் செய்தார். வந்தவுடனேயே முதன் மந்திரி ராஜாஜியைச் சந்தித்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

சந்திப்பு முடிந்து வெளியில் வந்ததும் பத்திரிகை நிருபர்கள் தேசமுக்கை "என்ன சமாசாரம்!" என்று கேட்டார்கள். "ராஜாஜியைக் கேளுங்கள்!" என்று அவர் சொல்லி விட்டார்.

ராஜாஜியைக் கேட்டார்கள். "எல்லாம் சந்தோஷமான சமாசாரந்தான்!" என்றார் ராஜாஜி.

"மறுபடியும் சந்தித்துப் பேசப் போகிறீர்களா!" என்று கேட்டதற்கு, "அவசியமாகப் பேசுவதற்கு வேண்டிய காரியம் ஒன்றுமில்லை" என்றும் சொல்லி விட்டார்.

மறுநாள் நம் நிதிமந்திரி ஸி. சுப்பிரமணியம் "சென்னை இராஜ்யத்தில் ஐந்து வருஷத் திட்டத்துக்குப் புறம்பான பெரிய திட்டங்களைச் சென்னை சர்க்கார் எடுத்துக் கொண்டு விட்டார்களோ என்ற சந்தேகம் ஸ்ரீ தேசமுக் கொண்டிருந்தார். அப்படி யில்லையென்று தெளிவு படுத்தி விட்டோம். வேறு தகராறு ஒன்று மில்லை!" என்று சொல்லி யிருக்கிறார்.

ஆகக்கூடி, இந்திய சர்க்காருக்கும் சென்னை சர்க்காருக்கும் நிதி சம்பந்தமாகப் பெரிய தக

ராறுகள் ஏற்பட்டிருந்ததாகச் சொன்னதெல்லாம் கனவோ, கற்பனையோ, பிரமையோ, பத்திரிகைக்காரர்களின் வெறும் சரடுதானே என்று சந்தேகிக்கும்படி ஏற்பட்டு விட்டது.

இவ்வளவு சுலபமாகத் தீர்ந்து போகக் கூடிய காரியத்துக்கு இவ்வளவு ஆர்ப்பாட்டங்கள் ஏன் என்றும் நினைக்கத் தோன்றுகிறது.

* * *

"நெருப்பு இல்லாமல் புகை உண்டாகாது" என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. அதுபோல, தகராறு ஒன்றுமே இல்லை என்றும் நாம் நம்பி விடுவதற்கில்லை.

கனம் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் சென்னையில் பஞ்சப் பிரதேசங்களைப் பார்வையிட வந்ததைப் பற்றி நிதி மந்திரி தேசமுக் குறிப்பிட்டு, "இவரை யார் போகச் சொன்னார்கள்! எங்களைக் கேட்டுக் கொண்டு போகவில்லை!" என்று மிக்க அலட்சியமாகப் பேசியதை நாம் எளிதில் மறந்து விடுவதற்கில்லை.

அதுபோலவே நம் முதல் மந்திரி ராஜாஜி சேலத்தில் பொதுக் கூட்டத்தில் பேசுகையில் "சைன்யத்துக்கு இருநூறு கோடி ரூபாய் செலவழித்துக் கொண்டு பஞ்ச நிவாரணத்துக்குப் பணமில்லை என்று சொல்வதில் என்ன பயன்! பஞ்சத்தினால் ஜனங்கள் இறந்து போனால் அப்புறம் பெரிய சைன்யத்தை வைத்துக் கொண்டு யாரைக் காப்பாற்றப் போகிறார்கள்!" என்று பகிரங்கமாக இந்திய சர்க்காரைக் குறைகூறும் தோரணையில் பேசியதையும் நாம் மறந்துவிட முடியாது.

ஆகவே தகராறு ஏதோ இருந்திருக்கலாம் என்றே கருத வேண்டும். அது நல்லபடியாகத் தீர்ந்து விட்டது பற்றி இப்போது நாம் சந்தோஷப்படவும் வேண்டும்.

இன்னும் சில காலத்துக்கு முன்னாலேயே நிதி மந்திரி தேசமுக் திருப்பதி வெங்கடரமணப் பெருமாளைத் தரிசிப்பதற்காக வந்து, அதற்கு முன்னால் ராஜாஜியையும் நேரில் சந்தித்துப் பேசியிருந்தால், மேற்கூறிய சங்கடம் எதுவுமே எழுந்திராமற் போயிருக்கலாம்.

போனது போகட்டும். இனிமேலாவது சென்னை இராஜ்யம் பற்றி ஏதாவது சந்தேகம் ஏற்படும் போதெல்லாம் நிதிமந்திரி தேசமுக் இதே முறையைக் கடைப் பிடிப்பார் என்று நம்புகிறோம்.

ஏழுமலையானைத் தரிசிக்க வந்து, வழியில் ராஜாஜியையும் பார்த்துப் பேசி விட்டால், சந்தேகம் ஏற்படவே இடமில்லாமற் போய்விடும்.

மொத்தத்தில், இந்திய சர்க்காருக்கும் சென்னை சர்க்காருக்கும் ஏற்பட்டிருந்த பொருளாதாரத் தகராறு தீர்ந்ததன் பொருட்டு ஏழுமலையானை மனமார வாழ்த்தி வணங்குகிறோம்.

# கொரியாக் கோணல் நிமிர்ந்தது

கொரியாப் பிரச்னை உலகத்தை மூன்றாவது மகா யுத்தத்துக்கு இழுத்துக் கொண்டு போய் விட்டு விடுமோ என்று தோன்றியது. கொரியாப் போரை நிறுத்துவதற்காகப் பான் முன்ஜாம் நகரில் ஆரம்பமான சமரசப் பேச்சு வார்த்தைகளில் பல மாதங்களுக்கு முன் முட்டுக்கட்டை ஏற்பட்டு விட்டது. யுத்தக் கைதிகள் விஷயமாக மூண்ட தகராறே மேற்படி முட்டுக் கட்டைக்குக் காரணம்.

பல ஆண்டுகளுக்கு முன்னால் ஜினீவாவில் ஏற்பட்ட சர்வதேச ஒப்பந்தத்தின்படி, யுத்தக் கைதிகளை அவரவர்களுடைய சொந்த நாட்டுக்குத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்று கம்யூனிஸ்டுகள் வற்புறுத்தினர்.

ஆனால், கம்யூனிஸ்டு யுத்தக் கைதிகளில் பலர் தங்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல மறுப்பதாக அமெரிக்கர்கள் அறிவித்தனர். அவர்களில் பலர் தங்களிடம் சரண் அடைந்தவர்கள்; பகைவர்களிடம் சரண் அடைந்த கைதிகள் திரும்பி வந்ததும் அவர்களைக் கம்யூனிஸ்டு சர்க்கார்கள் சுட்டுக் கொன்று விடுகிறார்கள்; அதனால்தான் மேற்படி கைதிகள் திரும்பிச் செல்ல மறுக்கிறார்கள்; அப்பேர்ப்பட்டவர்களைப் பலாத்காரமாகத் திருப்பி அனுப்புவது ஜீவகாருண்ய மற்ற செய்கையாக முடியும் என்று அமெரிக்கர்கள் காரணம் கூறினர்.

இவ்வாறாக, யுத்தக் கைதிகள் விஷயமாக ஏற்பட்ட முட்டுக்கட்டை நீடித்து வந்தது. மார்ஷல் ஸ்டாலின் காலமான பிறகு, ருஷ்யாவின் கொள்கையில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக, மறுபடியும் சமரசப் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. யுத்தக் கைதிகளின் பிரச்னையை நடுநிலைமை நாடுகளின் பரிசீலனைக்கு விடத் தாங்கள் தயார் என சீனக் கம்யூனிஸ்டுத் தலைவர்கள் அறிவித்தார்கள்.

எந்த நடுநிலைமை நாட்டின் பரிசீலனையில் விடுவது என்ற கேள்வி எழுந்தது. சென்ற மகா யுத்தத்தில் கலந்து கொள்ளாமல் நடுநிலைமை வகித்த ஸ்வீடனையோ அல்லது ஸ்விட்ஜர்லாந்தையோ கூட சீனப் பிரதிநிதிகள் ஒப்புக் கொள்ளவில்லை. பாகிஸ்தானின் பெயரைக் குறிப்பிட்ட போது அவர்கள் அதையும் அங்கீகரிக்கத் தயங்கினர்.

யுத்தக் கைதிகள் பிரச்னை சம்பந்தமாக ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தில், கடைசியாக ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து, போலந்து, செக்கோஸ்லவேகியா, இந்தியா இந்த நாடுகள் அடங்கிய ஒரு கமிஷனை அமைப்பது என்று முடிவாகியிருக்கிறது.

தங்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல விரும்புவோருக்கு, அவர்களுடைய இஷ்டப்படி செல்ல யாதொரு தடையும் இருக்கக் கூடாது. அவர்களைத் தவிர, மற்றக் கைதிகளை மேற்படி கமிஷனின் மேற்பார்வையில் விட்டுவிட வேண்டும். இந்தியாவின் பிரதிநிதியே நடுநிலைமைக் கமிஷனின் தலைவராகவும் பிரதம நிர்வாகியாகவும் இருப்பார். கமிஷனின் கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றுவதற்கு இந்தியத் துருப்புகள் மாத்திரமே உதவியாக இருக்க வேண்டும். தங்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல விரும்பாத கைதிகள் அவர்கள் இஷ்டப்படி ஏதாவதொரு நடுநிலைமை நாட்டுக்குச் செல்ல அனுமதிக்கப்பட வேண்டும். எந்த நடுநிலைமை நாட்டுக்கும் செல்ல விரும்பாத கைதிகளுக்குக் கொரியாவிலேயே தங்கி விடவும் உரிமை உண்டு.—இவைதான் ஒப்பந்தத்தின் முக்கிய ஷரத்துக்களாகும்.

மேற்படி ஒப்பந்தத்தின் மூலம் உலகப் பிரச்னைகள் சம்பந்தமாக இந்தியா அனுஷ்டித்து வரும் கொள்கை அப்பழுக்கு அற்றது என்பது ருஜுவாகியிருக்கிறது. நடுநிலைமைக் கமிஷனின் தலைவராகவும் பிரதம நிர்வாகியாகவும் இந்தியப் பிரதிநிதி நியமிக்கப்பட்டிருப்பதன் மூலம் இந்தியாவின் நேர்மையிலும் நீதி நெறியிலும், முற்றிலும் வெவ்வேறு கொள்கையுடைய இரு கட்சியினருக்கும் உள்ள மதிப்பு வெளியாகியிருக்கிறது.

# கொலைகாரக் கல்வி முறை!

நமது சின்னஞ் சிறு பள்ளிப் பிள்ளைகளிடையில் தற்கொலை 'ஃபேஷன்' வழக்கம்போல் வந்து போய் விட்டது. ("போய் விட்டது" அடியோடு தொலைந்து போய் விட்டது என்று நம்புவோமாக!) எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் தேறவில்லை யென்பதற்காகப் பூனாவில் ஒரு பையன் விஷம் தின்று இறந்தான்; சாத்தூரில் ஒரு பிள்ளை கட்டுக் கொண்டு இறந்தான்; பம்பாயில் ஒருவன் மச்சு மீதிருந்து விழுந்து இறந்தான். இறந்தவர்கள் எல்லாரும் பரீட்சை தேறாததைக் காரணமாகக் காட்டிக் கடிதம் எழுதி வைத்து விட்டு இறந்தார்கள். ஒருவன் பம்பாய் மந்திரிக்கு "இரண்டு வருஷத்துக்கு மேல் எந்தப் பையனையும் 'பெயில்' ஆக்க வேண்டாம்" என்று வேண்டுகோள் விடுத்து விட்டு இறந்தான். இன்னொருவன் "நான் என் கடமையில் தவறி விட்டேன். குடும்பத்துக்குப் பயன்படாமற் போய் விட்டேன். நீங்களாவது குடும்பத்துக்கு உங்கள் கடமையைச் செய்யுங்கள்! இல்லாவிட்டால், உங்களை ஆவி ரூபத்தில் வந்து சுற்றுவேன்!" என்று எழுதி வைத்து விட்டுத் தற்கொலை செய்துகொண்டு இறந்து போனான்.

சின்னஞ் சிறு பிள்ளைகளின் இளம் உள்ளத்தில் இத்தகைய ஏக்கத்தை உண்டாக்கக்கூடிய கல்வி முறையை, "நாம் ஒன்றுக்கும் உதவாதவர்கள்" என்று எண்ணச் செய்யும் கல்வி முறையை, "கொலைகாரக் கல்வி முறை" என்று சொல்லுவதில் தவறு ஒன்றுமில்லை யல்லவா! இல்லாவிடில், இந்தப் பிள்ளைகள் தற்கொலை செய்து கொண்டதற்குப் பொறுப்பாளிகள் யார்!

மூன்று பேர் தற்கொலை செய்து கொண்டு இறந்தார்கள் என்றால், முப்பதினாயிரம் பேர் அதற்குரிய மனோ நிலையை அடைந்திருக்க வேண்டும். அவ்வளவு மனச்சோர்வையும் ஏக்கத்தையும் "ஒன்றுக்கும் உதவாதவர்களாகி விட்டோமே" என்ற தாழ்வு மனப்பான்மையும் அடைந்திருக்க வேண்டும். அந்த ஏக்கமும் மனச் சோர்வுந்தான் பிற்காலத்தில் மனக்கசப்பாக மாறுகின்றன.

இத்தகைய தீய விளைவுகளை உண்டாக்கும் கொலைகாரக் கல்வி முறையை, சமூக விரோதியான கல்வி முறையை, மாற்றி அமைப்பதற்குத்தான் ராஜாஜி தமக்கு இயற்கையாக உரிய தீர்க்க திருஷ்டியுடன் புதிய கல்வித் திட்டத்தை வகுத்திருக்கிறார். அரசியல் அடிமைத் தனத்தைவிடக் கொடியதான கல்வி முறை அடிமைத்தனத்தை ஒழித்திருக்கிறார். ஏக்கமும் சோர்வும் தற்கொலை மனப்பான்மையும் நம் இளம் பிள்ளைகளிடம் தோன்றாம லிருக்க வழி வகுத்திருக்கிறார்.

கைத்திறமை கொண்டு உழைத்து ஒரு பொருளை உற்பத்தி செய்யக்கூடிய ஆற்றல் வாய்ந்த பிள்ளை எவனும் "நான் ஒன்றுக்கும் உதவாமற் போய் விட்டேன்" என்று எண்ண மாட்டான். மனச் சோர்வு அடைய மாட்டான். தற்கொலை மனப்பான்மை கொள்ள மாட்டான்.

ஆகையினால்தான், ராஜாஜி, "அரசியல் மாறுதலைக் காட்டிலும் இந்தக் கல்வி முறை மாறுதல் முக்கியமானது. நமது சமூகத்தை மகோன்னத நிலைக்குக் கொண்டு போகக் கூடியது" என்று கூறியிருக்கிறார்.

சுருங்கச் சொன்னால், புதிய கல்வித் திட்டம், கொலைகாரக் கல்வி முறையை உயிரளிக்கும் கல்வி முறையாக மாற்றி விடும் அற்புதத் திட்டமாகும். இதன் உண்மையை இன்றைக்கு அறியும் ஆற்றல் இல்லாதவர்கள் சில வருஷங்களுக்குப் பிறகாவது நிச்சயமாய் உணர்வார்கள். புதிய கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்ததற்காக ராஜாஜியிடம் எல்லையற்ற நன்றி செலுத்தவும் முன்வருவார்கள்.

# நகரங்களுக்கும் தொடரும்!

நம் கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ் மிக்க அதிர்ஷ்டசாலி. ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்த அம்மனிதர் சில காலந்தான் சென்னை மாகாணத்தின் கல்வி மந்திரியாயிருந்த போதிலும், நீடித்த காலத்துக்குத் தம்முடைய பெயரும் புகழும் நிலைத்திருக்க ஏற்பாடு செய்து கொண்டார். புதிய கல்வித் திட்டத்துடன் அவருடைய பெயரும் நிரந்தரமாகச் சேர்ந்து விளங்குமல்லவா! (புதிய கல்வித் திட்டத்தை உற்சாகமாக அமுல் நடத்தத் தொடங்கி யிருக்கும் எல்லாக் கல்வி இலாகா அதிகாரிகளுக்குமே இந்த அதிர்ஷ்டம் கிட்டப் போகிறது.)

சென்ற வாரத்தில் டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ் புதிய கல்வித் திட்டத்தைப் பற்றி அகில இந்திய ரேடியோ மூலம் ஓர் அருமையான பிரசங்கம் செய்தார். அதைக் கேட்டவர்களுக்கும், பத்திரிகையில் படித்தவர்களுக்கும் புதிய கல்வித் திட்டத்தைப் பற்றிய எல்லாவித சந்தேகங்களும் நீங்கிப் போயிருக்க வேண்டும். அப்பிரசங்கத்தைப் படித்த பிறகும் புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்கள் ஒன்று 'கற்றறி மூடர்'களாகவோ, அறிவே இல்லாத மூடர்களாகவோ, அல்லது வேண்டுமென்று விஷமத்துக்காகவே எதையும் எதிர்ப்பவர்களாகவோ இருக்கவேண்டும்.

ஆரம்பக் கல்வியின் ஏட்டுக் கல்வி அம்சம் எவ்விதத்திலும் குறைந்து விடாது என்பதைக் கல்வி மந்திரி தெளிவாக எடுத்துச் சொல்லி யிருக்கிறார். ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படித்த பிள்ளைகளை ஹைஸ்கூல் படிப்புக்குத் தகுதியாகச் செய்யும் எழுதல், படித்தல், கணக்கு, பூகோளம், பொது அறிவுப் பாடங்கள் கொஞ்சமும் குறையாமல் இருக்கும். பழைய கல்வித் திட்டத்தில் எவ்வளவு 'பீரியடுகள்' இவற்றுக்கு உண்டோ அவ்வளவு புதிய திட்டத்திலும் உண்டு. புதிய திட்டத்தின்படி ஆரம்பக் கல்வி கற்றுக் கொண்ட சிறுவர்களை ஹைஸ்கூல்களில் கட்டாயம் சேர்த்துக் கொண்டே தீர வேண்டும்.

கிராமப் பிள்ளைகளுக்கு உயர்தரப் படிப்புப் படிக்க வசதி குறைந்து விடுமோ என்று உண்மையாகச் சந்தேகப்பட்டவர்கள் இதைக் கேட்ட பின் அவர்களுடைய கவலை முற்றும் நீங்கப் பெற்றிருப்பார்கள்.

புதிய கல்வித் திட்டத்தின் அநுகூலங்களை வரிசைப் படுத்திக் கல்வி மந்திரி மிகத் தெளிவாக எடுத்துச் சொல்லி யிருக்கிறார். அவற்றில் முக்கியமானவை இவை :—

1. இன்று சென்னை மாகாணத்தில் ஆரம்பப் பள்ளிக்கூடம் போக வேண்டிய பிராயத்துக் குழந்தைகளில் சுமார் பாதிப் பேர் (40 லட்சம் குழந்தைகள்) பள்ளிக்கூடம் போகவில்லை. புதிய திட்டத்தின்படி செலவு இரட்டிக்காமல் படிக்கும் குழந்தைகளின் தொகையை இரட்டிக்கச் செய்ய

லாம். இன்று பள்ளிக்கூடம் போகாதிருக்கும் 40 லட்சம் குழந்தைகளையும் படிப்பிக்கலாம்.

(வேறு எந்தத் திட்டம் போட்டாலும் கல்வித் துறையில் இத்தகைய அரிய சாதனையைச் செய்யக் குறைந்தது இருபது வருஷங்கள் பிடிக்கும்.)

2. இன்று ஆரம்பப் பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளில் பெரும்பாலோர் இரண்டொரு வருஷம் படித்து விட்டு நின்று விடுகிறார்கள். குடும்பத்தின் உதவிக்கோ, குடும்பத் தொழில்களில் உதவிக்கோ பெற்றோர்கள் நிறுத்திக் கொள்கிறார்கள். பிள்ளைகளும் ஐந்து மணி நேரம் பள்ளிக்கூடச் சுவர்களுக்கிடையில் சிறைப்பட்டிருப்பதில் அலுத்துப் போய் விடுகிறார்கள். 1946-47ம் ஆண்டில் முதல் வகுப்பில் சேர்ந்த 12,22,775 பிள்ளைகளில் 4,61,686 பேர்தான் 1950-51ல் ஐந்தாம் வகுப்புக்கு வந்து சேர்ந்தார்கள். (அதாவது 100க்கு 38 பேர்தான்.) மற்றவர்கள் நடுவில் நின்று விட்டார்கள்.

இப்படி இரண்டொரு வருஷத்தில் படிப்பை நிறுத்தும் குழந்தைகள் சீக்கிரத்தில் எழுத்தறிவை மறந்து விடுகிறார்கள்.

இதனால் சர்க்கார் அடையும் நஷ்டம் அதாவது சமூகம் அடையும் நஷ்டம் வருஷந்தோறும் கோடிக்கணக்கில் ஆகிறது. ஆரம்பக் கல்விக்கு மொத்தம் செலவாகும் ஒன்பது கோடி ரூபாயில் பாதிக்குமேல் அநியாயமாக வீணாகி வருகிறது.

புதிய கல்வித் திட்டம் இந்த வீண் விரயத்தை நிறுத்திவிடும். அதன்படி ஒரு வேளைப் பள்ளிக்கூடத்துக்கு எல்லாக் குழந்தைகளும் தொடர்ந்து வருவார்கள். ஆகையினால், எழுத்தறிவு மனதில் ஊன்றும்வரையில் படித்துப் பயன்பெறுவார்கள்.

மேற்கூறிய இரு நன்மைகளும் எவ்வளவு மகத்தானவை என்பதை உணர்ந்து தெரிந்து கொள்ளாதவர்கள் எதையுமே தெரிந்து கொள்ள முடியாதவர்கள்தான்.

* * *

புதிய கல்வித் திட்டத்தை முழு மனதுடன் ஆதரிப்போருக்கும் ஒரு குறை இருந்தது. அதைக் கிராமங்களில் மட்டும் அமுல் நடத்தி நகரங்களுக்குக் கொண்டு வராமலிருப்பது ஏன் என்பதுதான். வெகு சீக்கிரத்தில் முனிசிபல் நகரங்களிலும் புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் அமுலுக்கு வரும் என்று டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ் தெரியப்படுத்தியிருக்கிறார். இந்த வாக்குறுதியை நாம் மகிழ்ச்சியுடன் வரவேற்று நன்றி செலுத்துகிறோம்.

இன்னும் உற்சாகம் அளிக்கும் செய்தியையும் கல்வி மந்திரி குறிப்பிட்டிருக்கிறார். ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்கு அடுத்தபடியாக லோயர் செகண்டரி பள்ளிக்கூடங்கள், உயர்தரப்பள்ளிக்கூடங்கள் (ஹைஸ்கூல்கள்) இவற்றிலும் ஒரு வேளைப் பள்ளிக்கூட முறை காலா காலத்தில் அமுலுக்கு வரும் என்று சூசகமாகச் சொல்லியிருக்கிறார். ஹைஸ்கூல்களில் ஒருவேளை ஏட்டுக் கல்வி முறை அமுலுக்கு வரும்போது, பிள்ளைகள் பரீட்சை தேறவில்லையென்பதற்காகத் தற்கொலை செய்து கொள்ளும் மனப்பான்மை கொள்ள மாட்டார்கள். "நாம் ஒன்றுக்கும் உதவாதவர்கள்" என்ற தாழ்வு மனப்பான்மையும் அடைய மாட்டார்கள். அப்போதுதான் சுதந்திர பாரத நாட்டில் ஒரு புதிய சமுதாயத்தை அமைப்பதற்கு உண்மையில் அடிகோலியதாகும்.

## வள்ளுவர் விருப்பம் !




திருவள்ளுவர் திருவிழா தமிழ்நாட்டில் பல இடங்களில் அமோகமாகக் கொண்டாடப்பட்டது.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 21

## உயிர் ஊசலாடியது!

ஒரு கண நேரம் ஒரு யுகமாகத் தோன்றக் கூடிய சந்தர்ப்பங்கள் சில உண்டு. அவற்றில் ஒன்று இப்போது வானதிக்கு நேர்ந்தது. அவள் கண்ணை மூடிக் கொண்டு, துர்க்கா பரமேசுவரியைப் பிரார்த்தனை செய்து கொண்டு, ஓட்டுக் கூரை ஓடத்தில் சுழன்று சென்ற நேரம் சில விநாடிகள் தான் இருக்கும். ஆயினும் அவை சில யுகங்களாகவே அவளுக்குத் தோன்றியது. பின்னர் ஏற்பட்ட ஒரு பெரிய அதிர்ச்சி அவளுடைய தேகத்தை யெல்லாம் குலுக்கிப் போட்டபோது அவளுடைய கண்களும் திறந்து கொண்டன. கூரை ஓடம் ஆற்றங்கரை மரத்தின் வேரில் மோதியதனால் அந்த அதிர்ச்சி உண்டாயிற்று என்பதை அவள் அறிந்தாள். அதனால் அந்தக் கூரை சுக்கல் சுக்கலானபோது அதிர்ஷ்டவசமாக வானதியின் பாதி உடம்பு, வளைந்திருந்த மரக் கிளைகளில் சிக்கிக் கொண்டிருந்தது. அதனால் அவள் மரத்தின் வேர்களில் மோதப்படாமல் தப்பினாள். தனது நிலையை ஒருவாறு உணர்ந்து மரக்கிளைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். வெள்ளத்தின் சுழல் அவளுடைய கால்களைப் பிடித்து அதி வேகமாக இழுத்துக் கொண்டிருந்தது. அந்த வேகத்தினால் கால்கள் பிய்த்துக் கொண்டு போய் விடும்போலிருந்தது. அவள் உடுத்தியிருந்த சேலையும் அவளை இழுத்து வெள்ளத்தில் விட்டுவிட முயன்றதாகத் தோன்றியது.

வானதிக்கு அச்சமயம் அதிசயமான மனோதிடமும் தைரியமும் எங்கிருந்தோ வந்திருந்தன. பல்லைக் கடித்துக் கொண்டு தன் முழு பலத்தையும்கொண்டு எழும்பி மரக் கிளையின் மேலே தாவி ஏறினாள். வளைந்து ஊசலாடிய மெல்லிய கிளைகளுக்கு மேலே இரண்டு கவடுகளாகப் பிரிந்த ஒரு பெரிய கிளையில் வசதியான இடத்தில் கெட்டியாக உட்கார்ந்து கொண்டாள். சேலைத் தலைப்புகளை முறுக்கித் தண்ணீரைப் பிழிந்தாள்.

அப்போது சடபட வென்று தண்ணீர் அடிபடும் சத்தம் கேட்டது. சற்று முன்னால், அவள் கண்ணை மூடிக்கொள்வதற்கு முன்னால், பார்த்த முதலையின் நினைவு வந்தது.

கீழே குனிந்து நாலு பக்கமும் உற்றுப் பார்த்தாள். முதலில், முதலையின் வால் தண்ணீரை அடிக்கும் காட்சி மட்டும் தென்பட்டது. முதலையின் உடம்பில் பெரும் பகுதியை அவள் ஏறி வந்த ஓட்டுக் கூரையின் உடைந்து சிதறிய பகுதிகள் மறைத்துக் கொண்டிருந்தன. சிறிது சிறிதாக முதலை தன் வாலின் உதவி கொண்டும் உடம்பை அசைத்து

நெளித்தும் அந்தக் கூரைப் பகுதிகளிலிருந்து முழுதும் விடுவித்துக் கொண்டு வெளி வந்தது. அப்படி வெளிவந்த மகிழ்ச்சியைக் காட்டுவதற்காக முதலை தன் வாயை அகலப் பிளந்தது. வானதியைப் பார்த்து அது "வா! வா! எப்படியும் நீ என் வாயில் விழ வேண்டியது தான்!" என்று சொல்வது போலிருந்தது.

வானதியும் தான் தப்பிப் பிழைத்த விதத்தை எண்ணிப் பார்த்து உற்சாகம் கொண்டிருந்தாள். "ஓகோ! அப்படியா சொல்கிறாய்? என்னை விழுங்கி விடுவேன் என்றா சொல்கிறாய்? முதலையே! உன் கை வரிசை, வால் வரிசை ஒன்றும் என்னிடம் பலியாது! நீ பல்லைக் காட்டுவதிலும் உபயோகமில்லை. உன் பசிக்கு என்னை நம்பி யிராதே! வேறு யாரை யாவது பார்த்துக் கொண்டு போ!" என்று வானதி முதலையிடம் பேசினாள். அந்தக் குரலைக் கேட்ட முதலை தன் இரண்டு பயங்கரமான கண்களாலும் அவளை உற்றுப் பார்க்கத்தொடங்கியது.

வானதி "ஓகோ! உன்னுடைய சபலம் உன்னை விடவில்லை போலிருக்கிறது!" என்று கூறி விட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள். அவளுடைய நிலைமை சற்றுப் பீதி அளிக்கக் கூடியதாகவே தோன்றியது. தண்ணீரின் பக்கம் அந்தப் பெரிய மரத்தின் கிளைகள் வளைந்து தொங்கின. ஆனால் கரையின் பக்கத்தில் அப்படித் தாழ்ந்திருந்த கிளைகளையே காணவில்லை. அடி மரத்தின் வழியாக இறங்கினால், அங்கே வேர்களோடு வேராக முதலை காத்துக் கொண்டிருந்தது. நதியின் பக்கம் வளைந்திருந்த கிளைகளிலிருந்து குதித்தால் மடுவின் சுழல் அவளைச் சுற்றிச் சுழற்றிப் பாதாளத்துக்கு இழுத்துக் கொண்டு போகக் காத்திருந்தது. அந்தப் பெரிய சுழலைச் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தால்கூடத் தலை சுற்றும் போலத் தோன்றியது. "கரைப் பக்கம் கிளைகள் உயரமாக இருந்தாலும் பாதகமில்லை; எப்படியோ குதித்துச் சமாளிக்கலாம்" என்று எண்ணி, மரக் கிளைகளின் வழியாக நடந்து மறு பக்கம் போக எத்தனித்து எழுந்தாள்.

ஏற்கெனவே வெகு நேரம் அவளுடைய உடம்பின் கீழ்ப் பகுதி முழுதும் தண்ணீரில் இருந்தபடியால் கால்கள் சில்லிட்டுப் போயிருந்தன. எழுந்து நிற்க முயன்றபோது கால்கள் வெட வெட வென்று நடுங்கின. "சீச்சீ! கால்களே! உங்களுக்கு என்ன வந்து விட்டது?" என்று சொல்லி விட்டு வானதி மறுபடி உட்கார்ந்து கொண்டாள். யாருக்குப் பொறுமை அதிகம்? முதலைக்கா, தனக்கா?— என்று சோதித்துப் பார்க்க வேண்டியதுதான் போலும்!

இச்சமயம், கஜேந்திரனின் பிளிறல் சத்தம் கேட்டு வானதி திடுக்கிட்டாள். சற்று முன் நதியைக் குறுக்கே கடந்து கரை ஏறி மேற்கு நோக்கிச் சென்ற யானை திரும்பி வந்து கொண்டிருந்தது. அதே சமயத்தில் ஆற்றின் கரை ஓரமாகப் படகு ஒன்று வருவதையும் கவனித்தாள். அந்தப் படகில் இருவர் இருந்தார்கள். ஆம், ஆம்; அந்த இருவரில் ஒருவன் ஜோதிடரின் சீடன்; இன்னொருத்தி பூங்குழலிதான்! கடைசியில் தன்னைக் காப்பாற்றி அழைத்துப் போகப் பூங்குழலிதானா வரவேண்டும்?

படகு மரத்தின் அடியில் வந்தது. மரக் கிளைமேல் உட்கார்ந்திருந்த வானதியைப் பூங்குழலி பார்த்து விட்டாள். சிரித்துக் கொண்டே "இளவரசி! நல்ல இடம் பார்த்து ஒளிந்து கொண்டீர்கள். சீக்கிரம் இறங்கி வாருங்கள்! அதோ அந்த யானையின்மேல் வருகிறது யார் தெரியுமா?" என்று கேட்டாள்.

வானதியின் மனத்தில் சட்டென்று உண்மை உதயமாகி விட்டது. ஆனாலும் அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக, "தெரியாதே? யார்?" என்று கேட்டாள்.

"தாங்கள் யாரைத் தேடிக்கொண்டு புறப்பட்டீர்களோ, அவர்தான்! இளவரசர்தான்!" என்றாள் பூங்குழலி.

வானதி அடங்கா வியப்புடன் யானையின்மேல் வருகிறவரைச் சில கண நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் அருகில் வரும் சமயத்தில் தான் மரக் கிளையின் மேல் உட்கார்ந்திருப்பது மிக்க அசம்பாவிதம் என்று தோன்றியது. பூங்குழலியின் யோசனைப்படி அவளுடைய படகில் இறங்கிவிட வேண்டியதுதான் என்று எண்ணிக் கீழே பார்த்தாள்.

அச்சமயம் படகு வெள்ளத்தின் வேகத்தினால் மரத்தடியில் நிற்க முடியாமல் நகர்ந்து செல்வதைக் கண்டாள். படகுடன் போக விரும்பாமல் பூங்குழலி தாவிக் குதித்ததையும் பார்த்தாள்.

ஐயோ! இது என்ன? பக்கத்தில் பயங்கர முதலை கிடப்பதை இந்தப் பெண் கவனிக்க வில்லையா, என்ன?

ஒரு கணத்தில் ஒன்பதினாயிரம் எண்ணங்கள் வானதியின் உள்ளத்தில் எழுந்து கொந்தளித்தன !

அவள் வாயிலிருந்து ஏதோ உளறிக் குளறி வார்த்தைகள் வந்தன !

"முதலை !" என்பது மட்டும் பூங்குழலியின் காதில் விழுந்தது. அவள் திரும்பிப் பார்த்தாள். ஆம் ; அவளுக்கு வெகு சமீபத்தில் ஒரு பிரம்மாண்டமான முதலை அதன் வாயைப் பிளந்துகொண்டிருந்தது. பூங்குழலி திரும்பிப் பார்த்த சமயம் முதலை தன் வாலை ஓங்கித் தண்ணீரில் அடித்தது.

பூங்குழலி எவ்வளவோ தைரியசாலிதான் ! எத்தனையோ அபாயங்களைச் சமாளித்திருக்கிறாள். ஆனால் பத்தடி தூரத்தில் வாயைப் பிளந்து கொண்டிருக்கும் முதலைக்கு முன்னால் மனோ தைரியத்தை மட்டும் வைத்துக் கொண்டு என்ன செய்ய? கரணம் தப்பினால் மரணம் ! ஒரு வினாடியில் உயிர் தப்பாவிட்டால், முதலையின் வாயில் போக வேண்டியதுதான் ! எப்படி உயிர் தப்புவது? மறுபடியும் படகில் ஏறிக் கொள்ள வேண்டியதுதான்!

இவ்வாறு எண்ணிப் பூங்குழலி தண்ணீரில் பாய்ந்தாள். படகு அதற்குள் கொஞ்ச தூரம் போய் விட்டது. ஜோதிடரின் சீடன் படகை அவ்விடத்தில் நிறுத்த முடியாது என்று தீர்மானித்துச் சற்றுக் கீழ்ப்புறம் சென்று கரையோரமாக அதை ஒதுக்க எண்ணிக் கொண்டு போனான். பூங்குழலியின் ஆபத்தான நிலையை அவன் கவனிக்கவில்லை.

படகைப் பிடிக்கத் தாவி நீந்திச் சென்ற பூங்குழலி அலைமோதும் கடலைக் காட்டிலும் காவேரி வெள்ளத்தின் கரையோரச் சுழல் அபாயகரமானது என்று கண்டாள். சுழலின் வேகம் அவளைக் கீழ் நோக்கி இழுத்தது. முதலை அவள் பின்னால் அவளைப் பிடிப்பதற்காக நகரத் தொடங்கிவிட்டதென்பதை உணர்ந்தாள். இந்த நிலையில் அவளுடைய சேலையின் தலைப்பு வளைந்திருந்த மரக் கிளைகளில் மாட்டிக் கொண்டு அவளுடைய நிலையை மேலும் அபாயகரமாக்கியது.

இதை யெல்லாம் மேற் கிளை மீது அமர்ந்திருந்த வானதி கண்டாள். தன் மீது பூங்குழலி கொண்டிருந்த மனக் கசப்பும், சற்று முன்னால் அவளுடைய கொடூர வார்த்தை காரணமாகத்தான் செய்த சபதமும், அவள் தன்னைக் கை தூக்கிவிட வேண்டாம் என்று எண்ணிக் கையை உதறித் தண்ணீரில் விழுந்ததும் மின்னல் வேகத்தில் அவள் மனதில் தோன்றி மறைந்தன. கூடவே, அப் பெண் பொன்னியின் செல்வரைக் கடலிலிருந்து காப்பாற்றிச் சூடாமணி விஹாரத்தில் கொண்டு போய்ச் சேர்த்ததும், அதனால் சோழ நாடும் தானும் அவளுக்குப் பட்டிருந்த நன்றிக் கடனும் நினைவு வந்தன. அதோ, யானைமீது அவர் வந்து கொண்டிருக்கிறார். அவர் வருவதற்குள்ளே இவள் முதலை வாயில் அகப்பட்டுக் கொண்டு விட்டால், அவர் மனம் என்ன பாடு படும்? தன்னைப் பற்றி அவர் என்ன எண்ணுவார்? பார்க்கப் போனால் தன்னைக் காப்பாற்றும் எண்ணத்துடன் அல்லவா இவள் தொடர்ந்து வந்து இந்த அபாயத்துக்கு உள்ளாகி யிருக்கிறாள்?

இவ்வளவு எண்ணங்களும், இங்கே நேயர்கள் படிப்பதற்கு ஆன நேரத்தில் நூற்றில் ஒரு பங்கு நேரத்திற்குள்ளே, வானதியின் உள்ளத்தில் தோன்றின. "வாயுவேகம் மனோவேகம்" என்று சொல்வது வெறும் வார்த்தை அன்று. எல்லா வேகங்களுக்குள்ளும் சிந்தனையின் வேகம்தான் அதிக வேகமானது.

இவ்விதம் எண்ண மிட்ட நேரத்திலேயே தன்னுடைய கடமை இன்னதென்பதையும் வானதி நிச்சயித்து விட்டாள். மேற்கிளையிலிருந்து ஒரு கிளை கீழே இறங்கி, அதன்மீது படுத்த வண்ணம் கைகளைக் கீழே நீட்டினாள். பூங்குழலியின் தலைக் கூந்தலை வாரிப் பிடித்துக் கொண்டாள். பூங்குழலி மேல் நோக்கிப் பார்த்தாள். வானதியின் கைப் பிடியிலிருந்து அவள் தப்பிச் செல்ல முயலவில்லை. ஒரு கரத்தை மேலே நீட்டினாள். வானதி இப்போது அந்தக் கரத்தைப் பிடித்துக் கொண்டாள். பூங்குழலியை மேலே இழுக்கத் தொடங்கினாள். இன்னொரு கையினால் மரக்கிளை ஒன்றைப் பற்றிக் கொண்டு பூங்குழலி வெள்ளத்திலிருந்து மேலே எழும்பினாள். வானதி இருந்த கிளையிலேயே அவளும் தாவி ஏறினாள். இரண்டு பேரையும் தாங்க முடியாமல் அந்தக் கிளை வளைந்தது. பூங்குழலியின் ஒரு கையை விட்டு விடாமல் வானதி மேற் கிளைக்குத் தாவினாள். பூங்குழலியும் மேலே ஏற முயற்சித்தாள். அந்த முயற்சியில் அவளுடைய கால்கள் தடுமாறின. மறு கணத்தில் அவள் மரக் கிளைக்கும் நதி வெள்ளத்துக்கும் இடையில் தொங்கிக் கொண்டிருந்தாள்.

அவளுடைய ஒரு கையை மட்டும் வானதியின் இரு கரங்களும் கெட்டியாகப் பற்றிக் கொண்டிருந்தன.

மரத்தின் வேர்களுக்கு மத்தியில் கிடந்த முதலை வெளிப் புறப்படுவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று. இப்போது அது வெளி வந்து விட்டது.

மரக்கிளையிலிருந்து தொங்கிய உருவத்தைப் பார்த்து விட்டு, வாயை மறுபடியும் அகலமாகத் திறந்தது.

பூங்குழலியின் உடலும் உயிரும் ஊசலாடிக் கொண்டிருந்தன.

வானதியின் மெல்லிய கரங்கள் பூங்குழலியின் வைர உடலின் கனத்தினால் இற்று விழுந்துவிடும் போலிருந்தன. அவளுடைய உள்ளமோ எந்தக் கணத்தில் பூங்குழலி தன் கையிலிருந்து நழுவி முதலையின் வாயில் விழுந்து விடுவாளோ என்ற எண்ணத்தினால் துடிதுடித்தது.

அத்தகைய விபத்து நேர்ந்துவிட்டால், பிறகு இளவரசரின் முகத்தை அவள் ஏறிட்டுப் பார்க்கவே முடியாது. பூங்குழலி விழும் போது அவளும் கூட விழுந்து உயிரை விட்டு விடுவதே மேலானது. அப்படித்தான் செய்ய வேண்டும்.

அதோ யானை நெருங்கி வந்துவிட்டது. இளவரசர் அதன்மேல் வருகிறார். அவர் வந்து காப்பாற்றும் வரையில், பூங்குழலியை விட்டு விடாமலிருக்க இந்தக் கரங்களில் சக்தி இருக்குமா......?

யானை ஆற்றங்கரையில் வந்து மரத்தடியில் நின்றது. மறுபடியும் ஒரு தடவை பிளிறியது. அந்தச் சத்தத்தைக் கேட்டு முதலை அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தது. என்ன நினைத்துக் கொண்டதோ என்னமோ, மறுபடியும் மரத்தின் வேர்களுக்கு மத்தியில் சென்று படுத்துக் கொண்டது.

வானதியும் மரக் கிளையின் மீது குனிந்த வண்ணம் யானையைப் பார்த்தாள். அதன் மேலிருந்தவரையும் பார்த்தாள். ஆம்; அவர் இளவரசர்தான்! பொன்னியின் செல்வர்தான்!

"யானைப்பாகா! யானைப்பாகா! அன்றொரு நாள் பறவைக் குஞ்சுகளைக் காப்பாற்றியதுபோல் இன்றைக்கு இந்தப்...

அப்பப்பா! இவள் பெயர் பூங்குழலி! ஆனால் என்ன கனம் கனக்கிறாள்? இரும்பினால் செய்த உடம்பு போல அல்லவா இருக்கிறது!

யானைப்பாகா! யானைப்பாகா! சீக்கிரம் வர மாட்டாயா?......

பூங்குழலி 'கிறீச்' என்று கத்தினாள்.

அதைக்கேட்ட வானதி அவளை முதலை பிடித்துக் கொண்டதாக எண்ணினாள். சொல்ல முடியாத பயங்கரம் அவள் மனதில் குடி கொண்டது. கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

அவளுடைய கைகளைப் பிடித்துக் கீழ் நோக்கி இழுத்துக் கொண்டிருந்த கனம் மேலும் அதிகமாயிற்று.

முதலைதான் பூங்குழலியைப் பிடித்து இழுப்பதாக எண்ணிக் கண்ணை மூடிய வண்ணம் அவளை இன்னும் கெட்டியாகப் பிடித்து மேலே தூக்க முயன்றாள்.

"கையை விடு! வானதி! கையை விடு!" என்று செவியில் அமுதென ஒலித்த இளவரசரின் குரல் கேட்டது.

இன்னது செய்கிறோம் என்று தெரியாமல் கையை விட்டாள்.

அவளுடைய தோள்களைப் பிய்த்து இழுத்த பாரம் நீங்கியது.

கண்களைத் திறந்து பார்த்தாள்.

பூங்குழலியைக் கஜேந்திரன் துதிக்கையினால் சுழற்றிப் பற்றி எடுத்துக் கரையிலே இறக்கி விடுவதைக் கண்டாள்.

பூங்குழலியின் கண்கள் மூடியிருந்தன.

யானைத் துதிக்கை அவள் மீது சுற்றிய போதுதான் அவள் அவ்வாறு 'கிறீச்' சிட்டுக் கத்தியிருக்க வேண்டும்.

அதேமாதிரி தானும் ஒரு தடவை கத்திவிட்டு மூர்ச்சையடைந்தது வானதிக்கு நினைவு வந்தது.

இப்போது அதைக் காட்டிலும் பன்மடங்கு அபாயகரமான நிலைமையாயிருந்தும், தான் பயப்படாமலும் பிரக்ஞை இழக்காமலும் இருப்பதை நினைக்க அவளுக்கே வியப்பாயிருந்தது.

தன்னுடைய தைரியத்தைப் பார்த்து மெச்சிப் பாராட்ட இளைய பிராட்டி இங்கே இல்லையே? ஆயினும் பாதகமில்லை. எப்படியும் ஒருநாள் அவருக்குத்...

இல்லை, இல்லை! கஜராஜனின் துதிக்கை மறுபடியும் அவளை நோக்கி நீண்டு கொண்டு வந்தது.

வானதி மீண்டும் ஒரு தடவை கண்களை மூடிக் கொண்டாள்.

மறுகணம் அவள் மரக்கிளையிலிருந்து தூக்கப்பட்டுக் கெட்டியான கரையில் விடப்பட்டதை உணர்ந்தாள்

கண் விழித்துப் பார்த்தபோது தான் நதிக் கரையில் பூங்குழலிக்கு அருகில் நிற்பதைக் கண்டாள்.

தன்னை அறியாமல் எழுந்த அன்புடனும் ஆர்வத்துடனும் அந்த ஓடக்காரப் பெண்ணைக்கட்டித்தழுவிக்கொண்டாள்.

பூங்குழலி கண்களில் நீர் ததும்ப, தழுதழுத்த குரலில், "இளவரசி! இன்று என் உயிரைக் காப்பாற்றினீர்கள். நான் உங்களை நதி வெள்ளத்தில் முழுகிப் போகாமல் காப்பாற்றி அழைத்துப் போக வந்தேன். அதற்கு மாறாக நீங்கள் என்னை முதலை வாயிலிருந்து காப்பாற்றினீர்கள். இந்த நன்றியை என்றும் மறக்க மாட்டேன்" என்றாள்.

"பூங்குழலி! நானா உன்னைக் காப்பாற்றினேன்? உன்னையும் என்னையும் அந்த யானைப்பாகன் அல்லவா காப்பாற்றினார்? அவரிடம் உன் நன்றியைக் கூறு!" என்றாள் வானதி.

"என் உயிர்மேல் எனக்கு அவ்வளவாக ஆசை ஒன்றுமில்லை. ஆனால் என் அத்தை அவளுடைய செல்வப் புதல்வரிடம் ஓர் அவசரச் செய்தி சொல்லும்படி என்னை அனுப்பினாள். அதைச் சொல்லுவதற்கு முன்னால் நான் செத்துப் போக விரும்பவில்லை!" என்றாள் பூங்குழலி.

யானையின் மேலிருந்தவரை வானதி நிமிர்ந்து பார்த்தாள். ஏதோ ஒரு விஷம குதூகலம் அவளை அச்சமயம் பற்றிக் கொண்டிருந்தது.

"யானைப் பாகா! யானைப் பாகா! எங்களை உன் யானைமேல் ஏற்றிக் கொண்டு போகிறாயா?" என்று கேட்டு விட்டுக் கலீர் என்று சிரித்தாள்.

## அத்தியாயம் 22

# மகிழ்ச்சியும் துயரமும்

வானதியின் சிரிப்பொலியுடன் கலந்த வார்த்தைகளைக் கேட்டு விட்டு, இளவரசரும் சிரித்துக் கொண்டே யானையின் மேலிருந்து கீழிறங்கினார்.

"ஆகா! யானை ஏற்றம் என்பது மிகவும் கடினமான காரியம். இராஜ்ய சிம்மாசனத்தில் ஏறுவது போலத்தான். யானைமேல் ஏறுவதும் கஷ்டம்; அதன் மேல் உட்கார்ந்திருப்பதும் கஷ்டம்; யானை மேலிருந்து இறங்குவது எல்லாவற்றையும் விடக் கஷ்டம். ஆயினும், அந்தக் கஷ்டங்களையும் சில சமயம் ஒருவன் அநுபவிக்க வேண்டியிருக்கிறது!" என்றார் பொன்னியின் செல்வர்.

"சிலர் அந்தக் கஷ்டத்தை மிக அற்பமான காரணங்களுக்காகக்கூட அநுபவிக்கிறார்கள். பறவைக் குஞ்சுகளைக் காப்பாற்றுவதற்காக யானை மேல் ஏறிக் கொண்டு ஓடி வருகிறவர்களும் உண்டு!" என்றாள் வானதி.

"அந்தச் சம்பவம் உனக்கு இன்னும் நினைவு இருக்கிறதா, வானதி! நீ அதைப் பற்றி இன்று வரை பேச்சே எடுக்காததினால் மறந்து விட்டாயோ என்று எண்ணினேன்!" என்றார் இளவரசர்.

"உலகமெல்லாம் சுற்றி அலைந்து அநேக வீரச் செயல்களில் ஈடுபடுகிறவர்கள் மறந்து விடுவார்கள். அரண்மனையிலேயே இருக்கும் பேதைப் பெண்ணுக்கு அதை ஞாபகம் வைத்துக்கொள்வதை விட வேறு என்ன வேலை? தாங்கள் அன்றைக்கு யானை மேல் ஏறிக் கொண்டு வந்ததும் நினைவிருக்கிறது. நான் கொடும்பாளூர்ப் பெண் என்று சொன்னதும் தாங்கள் முகத்தைச் சுருக்கிக் கொண்டு திரும்பிப் போனதும் நினைவில் இருக்கிறது!"

"அதற்கு அப்போது காரணம் இருந்தது, வானதி!"

"அந்தக் காரணம் இப்போதும் இருக்கிறது, ஐயா! தாங்கள் உலகமாளும் சக்கரவர்த்தியின் புதல்வர்; சோழ வள நாட்டின் கண்ணின் மணி போன்ற பொன்னியின் செல்வர். நானோ பொட்டைக் காட்டுப் பிராந்தியத்தில் பிறந்து வளர்ந்தவள். சிற்றரசர் குலமகள்; அதிலும், போரில் இறந்து போனவருடைய அநாதை மகள்!......"

"வானதி! நீ எனக்கு அநீதி செய்கிறாய்! நியாயம் அற்ற வார்த்தை கூறுகிறாய்! போனால் போகட்டும்! நான்

தஞ்சைக்கு அவசரமாகப் போகவேண்டும்! சீக்கிரம் சொல்! நீ எப்படி இங்கே வந்து சேர்ந்தாய்? தனியாக ஏன் வந்தாய்? ஓட்டுக் கூரைமேல் மிதந்து வந்தாயாமே? இந்தப் பெண் இங்கே எதற்காக வந்தாள்? எப்படி இத்தகைய பிராணுபத்தில் சிக்கிக் கொண்டாள்?..."

"நான் ஒருத்தி இங்கே நின்றுகொண்டிருப்பது தங்களுக்கு ஞாபகம் வந்தது பற்றிச் சந்தோஷம். ஒரு நிமிஷம் தனியாகப் பேச அவகாசம் கொடுத்தால் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டுப் போயே போய் விடுவேன்!" என்றாள் பூங்குழலி.

அந்த இரண்டு பெண்களும் அச்சமயம் இளவரசரின் முன்னால் நேருக்கு நேர் நின்றபோது, எப்படியோ அவர்களுக்கு அசாதாரண தைரியமும் வாசாலகமும் ஏற்பட்டிருந்தன.

"சமுத்திர குமாரி! உன்னை மறந்து விட்டேன் என்று நினைத்தாய்? அது எப்படி முடியும்? நீதான் நான் கூப்பிடக் கூப்பிட, நின்றுகூடப் பதில் சொல்லாமல் படகைச் செலுத்திக் கொண்டு வந்தாய்! அப்படி அவசரமாக வந்தவள் மரக் கிளைக்கும் முதலையின் திறந்த வாய்க்கும் நடுவில் நின்று ஊஞ்சலாடிக் கொண்டிருந்ததை என் ஆயுள் உள்ளளவும் மறக்க முடியாது!" என்று சொல்லி விட்டு இளவரசர் சிரித்தார்.

"உன்னைத் தூக்கமுடியாமல் தூக்கிப் பிடித்துக் கொண்டு வானதி பட்டுக் கொண்டிருந்த அவஸ்தையையும் நான் மறக்க முடியாது. ஆனால் நீங்கள் இருவரும் இங்கே எப்படி வந்து சேர்ந்தீர்கள்? எதற்காக? யாராவது ஒருவர் சீக்கிரம் சொல்லுங்கள்!"

"பொன்னியின் செல்வ! நானும் தங்கள் திருத்தமக்கையாரும் தங்களை வழியில் கண்டு நிறுத்தித் தஞ்சாவூருக்குப் போவதைத் தடை செய்வதற்காக வந்தோம். தாங்கள் தற்சமயம் தஞ்சாவூர் வந்தால், அங்கே பெரிய யுத்தம் மூளும் என்று இளைய பிராட்டி அஞ்சுகிறார். அதற்கு முன்னால் தங்களைச் சந்தித்துப் பேச விரும்புகிறார்......"

"இளையபிராட்டி இப்போது எங்கே?"

"குடந்தையில் இருக்கிறார்......"

"நீ மட்டும் எப்படி இங்கே வந்தாய்?"

"வழியில் குடந்தை ஜோதிடர் வீட்டில் நானும் இளைய பிராட்டியும் சிறிது நேரம் தங்கினோம். அந்தச் சமயத்தில் காவேரி கரையை உடைத்துக் கொண்டு வந்து ஜோதிடர் வீட்டையே அடித்துக் கொண்டு வந்து விட்டது. இளவரசே! காவேரித் தாய் தங்களைக் குழந்தைப் பிராயத்தில் காப்பாற்றியதாகச் சொல்கிறார்கள். தங்களுக்கு இந்தப் பொன்னி நதியின் பேரில் எவ்வளவோ ஆசை உண்டு என்பதையும் அறிவேன். ஆனால் இன்று இந்த நதியினால் நாடு நகரங்களும் மக்கள் மிருகங்களும் பட்ட கஷ்டத்தை நினைப்பதற்கே பயங்கரமாயிருக்கிறது. காவேரித் தாய் மிகக் கொடுமையானவள் என்று சொல்லத் தோன்றுகிறது......"

"வானதி! காவேரி அன்னையின்பேரில் அப்படிப் பழி சொல்லாதே! இந்த மாதரசிக்கு எங்கள் சோழ நாட்டின் பேரில் அவ்வளவு ஆசை. அந்த ஆசை வரம்பு மீறிப் போகும்போது கரையை உடைத்துக் கொண்டு கிளம்பி விடுகிறாள். இதை அறியாதவர்கள் அன்னையின் பேரில் வீண் பழி சொல்லுகிறார்கள்! ஏன்? கரையை மீறிக்கொண்டு வருவதற்காகச் சமுத்திர ராஜன் பேரில் கூடச் சிலர் குறை சொல்லுகிறார்கள். ஆனால் பூங்குழலி அப்படிக் கடலரசன் பேரில் குறை சொல்ல மாட்டாள்!" என்றார் இளவரசர்.

"மன்னியுங்கள்! நானும் இனிக் காவேரி அன்னையின் பேரில் குற்றம் சொல்லவில்லை. நானும் தங்கள் தமக்கையும் குடந்தை ஜோதிடர் வீட்டில் இருந்தபோது திடீரென்று காவேரியின் ஆசை பொங்கிப் பெருகி விட்டது. தங்கள் தமக்கை முதலியவர்கள் ஓடிப் போய்க் கோவில் மண்டபத்தின் பேரில் ஏறிக் கொண்டார்கள். நான் என் அசட்டுத் தனத்தினால் மண்டபத்தின் பேரில் ஏறத் தவறிவிட்டேன். ஜோதிடர் வீட்டு ஓட்டுக் கூரையைப் பிடித்துக் கொண்டு மிதந்து வந்தேன்......"

"உன்னைக் காப்பாற்றுவதற்காகப் பூங்குழலி படகில் ஏறிக்கொண்டு வந்தாளாக்கும். அழகாய்த்தானிருக்கிறது! உங்கள் இருவரையும் சேர்த்து இந்தக் கஜேந்திரன் காப்பாற்ற வேண்டியதாயிற்று. இந்த யானையின் அறிவே அறிவு! உங்கள் இருவரையும் அதன் துதிக்கையில் பூமாலையை எடுப்பதுபோல் அசங்காமல் கசங்காமல் எடுத்துச் சற்று முன் கரையில் விட்டது! இன்று காலையில் இதே யானை கையில் அங்குசத்துடன் நேரங் கழித்து ஓடி வந்த யானைப் பாகனைத் தூக்கிச் சுழற்றி வெகு தூரத்தில் போய் விழும்படி

எறிந்தது! அவன் உயிர் பிழைத்திருப்பதே துர்லபம்!''

''ஐயோ! அது என்ன? நானே தங்களிடத்தில் அதைப் பற்றிக் கேட்க வேண்டும் என்றிருந்தேன்......''

''என்னை நீ என்ன கேட்க வேண்டுமென்றிருந்தாய்?''

''யானைப் பாகனாலும் அங்குசத்தினாலும் தங்களுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்ததா என்று கேட்க விரும்பினேன்.''

''தீங்கு நேர இருந்தது என்பது உண்மைதான்; அது உனக்கு எப்படித் தெரிந்தது? ஜோதிடர் சொன்னாரா, என்ன? அந்தப் பித்து இளையபிராட்டிக்கு இன்னும் போகவில்லையா?''

''ஜோதிடர் சொல்லவில்லை! சொன்னாலும் நாங்கள் நம்பியிருக்கமாட்டோம். பெரிய பழுவேட்டரையர் சொன்னார்!''

''என்ன? என்ன? யார் சொன்னார்?''

''ஆம், இளவரசே! தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர்தான் சொன்னார். நாங்கள் ஜோதிடர் வீட்டில் இருந்த போது திடும்பிரவேசமாக அவர் உள்ளே நுழைந்து வந்தார். தங்களுக்கு வரக்கூடிய ஆபத்தைப் பற்றிச் சொன்னார். விஷந் தடவிய அங்குசத்தைப் பற்றியும் சொன்னார்......!''

''ஆகா! இது பெரிய அதிசயந்தான்! அவருக்கு எவ்விதம் தெரிந்தது? அவரும் ஜோதிடர் ஆகிவிட்டாரா? அல்லது ஒரு வேளை...எல்லாரும் சொல்லுவது போல் அவரே இந்த ஏற்பாடு செய்தாரா?''

''இல்லை, இளவரசே! அவர் செய்த ஏற்பாடல்ல. பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்ததை ஒட்டுக் கேட்டதினால் அறிந்து கொண்டாராம்......!''

''ஓகோ! இன்னும் ஏதாவது அவர் சொன்னாரா?''

''நினைப்பதற்கும் சொல்வதற்கும் பயங்கரமாயிருக்கிறது. தங்களையும் தங்கள் தந்தையையும் மூத்த இளவரசரான ஆதித்த கரிகாலரையும் ஒரே நாளில் யமனுலகம் அனுப்ப அந்தச் சதிகாரர்கள் திட்டமிட்டிருப்பதாகச் சொன்னார். அவர் ஆதித்த கரிகாலரைக் காப்பாற்றுவதற்காகக் கடம்பூருக்கு விரைந்து போய் விட்டார். தங்களுக்கும் சக்கரவர்த்திக்கும் இளைய பிராட்டி எச்சரிக்கை செய்ய வேண்டும் என்பதாகச் சொல்லிவிட்டுப் போனார்......''

''ஆகா! அவருடைய எச்சரிக்கை என் ஒருவன் விஷயத்தில் உண்மையாயிருந்தபடியால் மற்றவர்கள் விஷயத்திலும் உண்மையாகத்தானிருக்க வேண்டும்!... சமுத்திர குமாரி! நீ ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே?''

''ஆம், இளவரசே! ஈழத்து ஊமை ராணி தங்களை உடனே தஞ்சைக்கு அழைத்து வரும்படி என்னை அனுப்பி வைத்தார்......''

''ஆகா! அதைப் பற்றி உன்னிடம் கேட்க மறந்தே போனேன். ஈழத்து ராணிக்காகவே நான் இவ்வளவு அவசரமாகப் புறப்பட்டு வந்தேன். அவரைத் தஞ்சாவூருக்கு யாரோ பலவந்தமாகக் கட்டி இழுத்து வந்தார்களாமே? அது உண்மையா?''

''உண்மைதான், ஐயா! ஆனால் முதன் மந்திரி அநிருத்தர் நல்ல நோக்கத்துடனேதான் அவ்விதம் செய்தார்...''

''ஓகோ! அநிருத்தர் வேலையா? என் தந்தையிடம் சேர்ப்பிப்பதற்காக அழைத்துச் சென்றிருக்க வேண்டும். பூங்குழலி! முதன் மந்திரியின் நோக்கம் வெற்றி பெற்றதா? அவர்கள்...சக்கரவர்த்தியும் ஈழத்து ராணியும் சந்தித்தார்களா?''

''ஆம், சந்தித்தார்கள்!''

''என் வாழ்க்கை மனோரதம் நிறைவேறி விட்டது. இதைக் காட்டிலும் சந்தோஷமான செய்தி எனக்கு வேறு எதுவும் இல்லை. என் பெரியன்னை அருகில் இருக்கும் வரையில் என் தந்தையின் உயிருக்கு அபாயமும் இல்லை. அந்த மாதரசிக்கு அபூர்வமான வருங் கால திருஷ்டி உண்டு என்பது உனக்குத் தெரியுமே, பூங்குழலி!''

''ஆம், எனக்கு அது தெரியும்! ஈழத்து ராணி இருக்கும் வரையில் சக்கரவர்த்திக்கு அபாயம் இல்லை. ஆனால்...!''

''ஆனால் என்ன? ஏன் தயங்கி நிற்கிறாய், சமுத்திர குமாரி!''

''சொல்லத் தயக்கமாகவேயிருக்கிறது. நா எழவில்லை. ஈழத்து ராணி தம்முடைய இறுதிக் காலம் நெருங்கி விட்டதாக எண்ணுகிறார். கடைசியாகக் கண் மூடுவதற்கு முன்னால் தங்களை ஒரு முறை பார்க்க விரும்புகிறார்!'' என்றாள்.

''தெய்வமே! இது என்ன சொல்லுகிறாய்? சந்தோஷமான செய்தியைச் சொல்லி விட்டு உடனே இந்தப் பேரிடி போன்ற செய்தியையும் சொல்லுகிறாயே! இனி நான் ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை, வானதி! இளைய பிராட்டியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதாகச் சொல்லு!'' என்றார் இளவரசர் அருள்மொழி வர்மர்.

# வட்ட மேஜை

இன்று இந்தியா இருக்கும் நிலையில் ஏதாவது ஒரு பெரிய அடிப்படையான மாற்றம் ஏற்பட்டாலொழிய இந்நாட்டுக்கு உய்வு இல்லை என்பது யாவரும் ஒத்துக் கொள்ளும் செய்தி. இப்போது இந்நாட்டில் தாண்டவமாடும் வறுமை, பஞ்சம், பசி, பட்டினி, உயர்ந்தோர் தாழ்ந்தோர் வேறுபாடு, முதலாளி தொழிலாளி பிணக்கு, பணம் படைத்தோர் செருக்கு, படித்த கூட்டத்தின் அகந்தை, எத்தர்களின் வாழ்வு, ஏமாளிகளின் தாழ்வு - ஆகப் பொதுவாக மக்கள் இனத்தின் வாட்டம் நாளுக்கு நாள் மிகுந்து கொண்டே வருகிறது. நாட்டின் நல்வாழ்வில் நாட்டமுள்ளோர்க்கு இவை யாவும் மனவுளைச்சலைத் தராமற் போகாது. இந்தச் சூழ்நிலையில் நாட்டில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டாலொழிய, நாடு தவறான பாதையில் செல்லுவதை எவராலும் தடுக்க முடியாது. இம்மாற்றத்தை ஏற்படுத்தச் சரியான வழி சோஷலிஸந்தான் என்று தாங்கள் தெளிந்து கூறியது வரவேற்கத்தக்கது. ஆனால் தாங்கள் கூறுகிறபடி காங்கிரஸே இச் சோஷலிஸப் பாதையை வகுத்துக் கொடுக்கும் என்று நம்ப என் போன்றவர்களால் முடியவில்லை. அப்படிக் காங்கிரஸ் விரும்பியிருந்தால் தேர்தலில் வெற்றிபெற்றவுடனே அதற்கான அறிகுறிகளைத் தோற்றுவித்திருக்கலாம். ஆனால், அதற்கு மாறாக அது பெருத்தவர்களையே பெருக்கவைப்பதிலும், கொடுத்தவர்களுக்கே கொடுப்பதிலும், சலுகையுள்ளவர்களுக்கே சலுகை காட்டுவதிலும் முனைந்து வந்திருக்கிறது. காங்கிரஸ் சோஷலிஸத்தையும் கடைப்பிடிக்கவில்லை; முதலாளித்துவத்தையும் முழுதும் கடைப்பிடிக்கவில்லை. இவை இரண்டிற்குமிடையே இருந்து எடுப்பார் கைப்பிள்ளையாய் ஊசலாடி வருகிறது. இதைத்தான் அதிக ஆபத்தான நிலை என்று கருதவேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் எத்தனை துணிச்சலோடு சோஷலிஸத்தையும், கம்யூனிஸத்தையும் அவ்வளவு சாதாரணமாக மதித்திருப்பார் நம் நிதியமைச்சர்! இத்தகைய போக்குகளுக்குப் பல உதாரணங்கள் கொடுக்கலாம் என்றாலும், இவ்வமைச்சர் ஒருவரின் பேச்சே போதுமானது.

நாட்டில் இன்றும் லஞ்ச ஊழல் சென்ற பாடாகக் காணோம். ஏழைகளுக்குப் போதுமான வசதிகள் செய்து தரப்படவில்லை. தொழிலாளர் பிரச்னை அன்றாடம் வளர்ந்து கொண்டே போகிறது. கல்வித்துறையும் குறிப்பிட்ட சிலர் கையில் அகப்பட்டுக் கொண்டு அவதிப்படுகிறது. ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான மக்கள் பிச்சைத் தொழிலைப் புகலடைகிறார்கள். இவற்றோடு இயற்கையும் நம்மீது சதி செய்கிறது. இத்தகைய நெருக்கடியில் எந்த இனம் வளரும் என்று சொல்லாமலே உணரலாம். ஆனால், இதனை ஆட்சியாளர் உணர வேண்டுமே!

ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் சமர்ப்பித்த 14 அம்சத் திட்டத்தை நேரு அவர்கள் ஏற்றுக் கொண்டிருந்தால், இந்த நேரம் நம் நாட்டு நிலைமை எவ்வளவோ அளவு மாறியிருக்கும். ஆனால், தீவிர வசமாக அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்த 14 அம்சத் திட்டம் தற்காலிக நிலைமையைச் சீர்ப்படுத்துவதற்கான திட்டமே தவிர, இதுவே நிரந்தரமான முற்ற முடிந்த திட்டம் என்று சொல்லிவிட முடியாது. காலம் இன்று போகும் வேகத்தில் அதில் கூறியுள்ள சிறிய அளவு மாற்றங்களைக் கூடக் காங்கிரஸ் செய்யத் தயங்குகிறது என்றால், நாட்டின் நிலைமையைப் பற்றி நாம் என்ன கூற முடியும்! எதிர்காலந்தான் அதற்குப் பதில் கூற வேண்டும்.

சென்னை
11—5—53 பகவதி ஜயராமன்

●

பாங்கி ஊழியர்கள் மத்தியதர வர்க்கத்தின் ஆரம்ப நிலையிலுள்ளவர்கள். எங்கள் வேலை நிலைமைகளும் பொறுப்புகளும் பொது மக்கள் நன்கு அறிந்தவையே. நாங்கள் எங்களுக்குள்ள குறைகளை நிவர்த்தித்துக் கொள்ளும் முறையில் சங்கங்கள் ஏற்படுத்திக் கொண்டு எங்கள் அதிருப்திகளை உரிய முறையில் தெரியப்படுத்திக் கொண்டதன் பேரில் தொழில் விசாரணை மன்றம் அரசாங்கத்தாரால் நிறுவப்பட்டு விசாரணைகள் நடந்து 1951-ம் ஆண்டில் சென் தீர்ப்பு வெளியானது. அதில் சில குறைகளிருந்த போதிலும் நன்மைகளும் இருந்தன. நியாயமான ஊதிய விகிதங்கள் ஏற்படுத்தப்பட்டன. அந்தத் தீர்ப்பை ஊழியர்கள் எல்லோரும் வரவேற்று ஒப்புக் கொண்டு அதன்படி இதுவரை நடந்து வந்தது. முதலாளிகள் அதை ஸுப்ரீம் கோர்ட்டுக்கு எடுத்துச் சென்று செல்லாதென ஆக்கி விட்டார்கள்.

சென் தீர்ப்பில் ஒரு அங்கத்தினரான நீதிபதி நளம் சந்திரசேகரய்யர் அவர்கள் விசாரணை நடக்கும் சமயம் அரசாங்கத்தார் பாகிஸ்தான் எல்லைப் பிரிவினை சம்பந்தமாக அமைத்ததன் பேரில் அவர்கள் சிறிது காலம் விசாரணையின் போது இல்லாமலிருக்க வேண்டியதாயிற்று. பின்பு விசாரணை முடிந்து தீர்ப்பு வெளியாகும் போது அவரும் சேர்ந்து ஒப்புக் கொண்டு தீர்ப்பில் கையொப்பமிட்டுத் தீர்ப்பை வெளியிட்டார்கள். அவர்கள் விசாரணையின்போது சிறிது காலம் இல்லாததைக் காரணமாக்கி அந்தத் தீர்ப்பு செல்லத் தக்கதல்லவென பாங்கி முதலாளிகளின் சார்பில் வாதாடப்பட்டது. பின் ஸுப்ரீம் கோர்ட்டில் அது செல்லத் தக்கதல்லவென தீர்ப்பாயிற்று. அதன் பேரில் அரசாங்கம் மாஜி நீதிபதி பஞ்சாபகேச சாஸ்திரி அவர்களின் தலைமையில் மற்றொரு தொழில் டிரிப்யூனல் ஏற்படுத்தியது. அதில் ஸ்ரீமான்கள் டிசௌசா, பினன் ஆகியோர் அங்கத்தினர்கள். முதல்வர் ஒரு பொருளாதார புரொபசர், இரண்டாமவர் ஒரு மாஜி பாங்கு டைரக்டர். ஊழியர்களின் அனுதாபிகள் என்று சொல்ல யாரும் அந்த டிரிப்யூனலில் அங்கத்தினரல்ல. மேற்படி சாஸ்திரி டிரிப்யூனல் விசாரணை நடத்தி ஏப்ரல் மாதம் தீர்ப்பை வெளியிட்டிருக்கிறது.

இந்த சாஸ்திரி தீர்ப்பின்படி நாங்கள் தற்போது வாங்கும் சம்பள விகிதம், பஞ்சப்படி, ஊதிய உயர்வு முதலியன குறைக்கப்பட்டிருக்கின்றன. போனஸ் விஷயம் அதிகாரிகளின் இஷ்டத்திற்கு விடப்பட்டிருக்கிறது. ஓவர்டைம் விகிதம் குறைக்கப்பட்டிருப்பது மல்லாமல் வேலை உத்தரவாதமும் இல்லை. ஆகையால் பலவிதத்திலும் பார்த்தாலும் இது ஊழியர்களுக்கு ஒரு பெரிய தண்டனையே தவிர நியாயமான தீர்ப்பல்ல.

நாடெங்கிலும் பாங்கி சிப்பந்திகள் மேற்படி சாஸ்திரி தீர்ப்பைக் கண்டித்து ஊர்வலங்கள் பொதுக் கூட்டங்கள் நடத்தித் தங்கள் குறைகளைத் தெரிவித்து வருகிறார்கள். மதுரையிலுள்ள பாங்கி ஊழியர்கள் அனைவரும் சென்ற 16-5-53

தேதியன்று அமைதியான முறையில் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தினோம். சென்ற 22-5-53 தேதியன்று ஸ்ரீ அசோக் மேத்தா அவர்கள் மதுரை விஜயத்தைப் பயன்படுத்திக் கொண்டு எங்கள் கூட்டமொன்று நடத்தினோம். கூட்டத்தில் சாஸ்திரி தீர்ப்பை அமல் நடத்தா திருக்கும்படியும், சென் தீர்ப்பின் நல்ல அம்சங்களை அமல் நடத்தச் சட்டமியற்றவும், கோடிக் கணக்கான ரூபாய் வருமானமுள்ள பாங்கி, இன்ஷூரன்ஸ் கம்பெனிகளைத் தேசிய மயமாக்க வேண்டும் என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன.

சென் தீர்ப்பு செல்லத் தகாதென ஆனதற்குக் காரணம் அரசாங்கமே. ஆதலால் அவர்கள் தங்கள் தவறை உணர்ந்து மேற்படி சென் தீர்ப்பைச் சட்டமாக ஆக்கினால் மத்தியதர வர்க்கத்தினரான சுமார் 60,000க்கு மேற்பட்ட பாங்கி ஊழியர்களும் அவர்கள் குடும்பங்களும் காப்பாற்றப்படுவதுடன், சுதந்திர அரசாங்கத்தின் கௌரவ பிரசாரகர்களான எங்கள் ஆதரவையும் அரசாங்கம் இழக்காம லிருக்கும்.

மதுரை
23—5—53 எஸ். கல்யாணசுந்தரம்

[ஏற்கெனவே பாங்கி ஊழியர்கள் வாங்கிக் கொண்டிருந்த சம்பள விகிதங்களையும் குறைக்கும் படியான சாஸ்திரி டிரிப்யூனல் தீர்ப்பு மிக வருந்தத்தக்கது என்றே நாமும் கருதுகிறோம். அதை மாற்றிப் பழைய ஸென் தீர்ப்பை அமுல் நடத்தும் படி செய்வதற்குப் பாங்கி ஊழியர்கள் சட்டரீதியான எல்லாக் கிளர்ச்சிகளையும் செய்ய வேண்டும். ஆனால் வேலை நிறுத்தம் போன்ற காரியங்களில் இறங்கக் கூடாது. ஆசிபர்.]

●

நான் ஒரு தமிழ் ஆசிரியன். ஆசிரியத் தொழிலிலே இருபத்திரண்டு வருஷ அநுபவ முடையவன்.

இரண்டு வருஷங்களுக்கு முன், "கல்கி"யிலே, புதிய கல்வித் திட்டத்தின் அவசியம் பற்றி எழுதி வந்த கருத்துக்களைத் தவறாமல் படித்தேன்.

அந்த நாள் தொடக்கம், "தமிழ் நாட்டிலேயாவது இப்புதிய திட்டம் நிறைவேற வேண்டும்" என ஆசை கொண்டேன். இத் திட்டத்தால், ஒரே கட்டிடத்தில் இரண்டு பங்கு மாணவர்கள் படிக்கவும், முன் இருந்த ஆசிரியர்களே அந்த இரண்டு பங்கு மாணவர்களைப் படிப்பிக்கவும் வசதி கிடைப்பதால், எழுத்தறிவை மக்களிடையே இரண்டு மடங்கு பரப்ப முடியுமல்லவா!

இப்பொழுது பாடசாலைகளிலே, ஒரு நாளில் ஐந்து மணி நேரம் மாணவர்கள் படிக்கிறார்கள். அதனால் பகல் முழுவதும் படிப்பிலேயே கழிகிறது. ஒரு நாளில் மூன்று மணி, படிப்பதானால், பெற்றோருக்கும் உதவி; தொழிற் பயிற்சியும் கிடைக்கிறது. ஒரே திட்டத்திலே, எழுத்தறிவு, கைத்தொழில் பயிற்சி, பொருளாதார உதவி ஆகிய மூன்றும் நிறைவேறும்பொழுது, அதனை ஏன் எதிர்க்க வேண்டும்!

இப்போதைய ஐந்து மணிப் படிப்பிலே, தேவையில்லாத பாடங்களெல்லாம் திணிக்கப் படுகின்றன. எண், எழுத்து, வாசிப்பு, சுகவாழ்வு ஆகிய பாடங்கள் படித்தால் போதும். அவைகளுக்கு இரண்டரை மணி நேரம் போதும். ஓய்வுக்காக அரைமணி கூட்டி, மூன்று மணி காலப் படிப்பு ஏற்படுத்தி யிருக்கிறது போதும்.

ஆசிரியர்களுக்கு இதனால் மிகச் சிரமம் என்பது உண்மை. பின்னேரப் பாடசாலையிலே ஆசிரியர்கள் சோர்வடைவார்கள்; அதனால் மாணவர்களும் கொஞ்சம் பாதிக்கப்படுவார்கள். எல்லாம் பிரதான பாடங்களாகையினால், இந்தச் சங்கடம் சற்று நேர்க்கேத தீரும்.

ஆசிரியர்களுக்கு, உழைப்புக் கேற்ப, நல்ல சம்பளம் கொடுத்தால், கட்டாயம் கஷ்டத்தையும் சமாளித்து வெற்றி பெறுவார்கள்! ஒவ்வொரு வருஷமும், காலைப் பிள்ளைகளைப் பின்னேரத்துக்கும், பின்னேரப் பிள்ளைகளைக் காலைக்கும் மாற்றுவதனாலும், இந்தக் கஷ்டம் ஓரளவு குறையும். கல்வியும் எல்லாருக்கும் சமமாகக் கிடைக்கவும் வசதி ஏற்படும்!

இலங்கையிலே, பல தோட்டப் பாடசாலைகளில், ஒரே கட்டிடத்திலேயே இரண்டு நேரம் (காலை 7—11; பின்நேரம் 12—4) வெவ்வேறு பிள்ளைகளை ஒரே ஆசிரியர் படிப்பிக்கிறார். இது இன்று நேற்றல்ல, பல வருஷங்களாக நடைபெற்று வரும் உண்மை!

"பாகிஸ்தானைக் கொடுத்துத் தொலைப்போம்" என வாதாடியவர் ராஜாஜி. மூன்று வருஷங்களுக்கு முந்தியே, "நீங்கள் வேண்டாமென்றாலும் இரண்டரை வருஷங்களில் சுயராஜ்யம் வந்தே தீரும்" எனத் தீர்க்கதரிசனம் கூறியவர் ராஜாஜி. இத்தகைய அறிவு ஆற்றல்களெல்லாம் படைத்த மகான் ராஜாஜி தொடங்கிய கல்வித் திட்டம், தமிழ் நாட்டில் மாத்திரம் அல்லாமல், இந்தியா முழுவதும் பரவப் போகிறதென்பது எனது திடமான நம்பிக்கை!

பருத்தித்துறை
25—5—53 மு. ஏரம்பமூர்த்தி

●

நம் தமிழ் நாட்டிலே புதுமை எழுத்தாளர்கள் மிகவும் தோன்றியுள்ள இக்காலத்தில் அவர்கள் எழுதிய பிற்போக்கான படம் ஒன்றைப் பார்க்க வேண்டிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

நம் தமிழ் இனத்துக்கே, தமிழ்நாடு இருக்கும் வரை கல்லில் வரையப்பட்டு வைக்க வேண்டிய அவமானம். பெண் மனம் என்ற படத்திலே நம் தமிழ் நாட்டில் பிறந்த இந்தியன், தமிழன், கடனால் கஷ்டப்பட்டு கடன் கொடுக்க முடியாமல் கள்ளத் தோணிமூலம் இலங்கைக்கு வந்து ரிக்ஷா இழுத்துப் பணம் சம்பாதிக்க வருகிறான். நம் இந்தியாவும் நம் அண்டை நாடாகிய இலங்கையும், ஒற்றுமையுடன் இருக்கவும் சிநேகம் வளரவும் முற்போக்கான படம் எடுத்தால் மிகவும் நல்லது. தற்சமயம் இந்திய அரசாங்கமும் இலங்கை அரசாங்கமும் மேல் குறிப்பிட்ட தவறு நடக்காமல் முயற்சி எடுத்துச் சீர்திருத்தி வந்து இருக்கிற இந்த நாளில், இந்தியர்களுக்கு அவமானம் இல்லாமல் படம் எடுத்தல் நல்லது. மிகவும் சிறந்த முறையில் ஒற்றுமை வளரப் படம் எடுத்து அனுப்பினால் வெளிநாடு சென்று பிழைக்கும் தமிழர்கள் கொஞ்சமாவது மானத்துடன் வாழலாம்.

நானும் என் சிங்கள நண்பரும் மேற்படி படத்தைப் பார்க்கப் போய் வரும்பொழுது "பார்த்தீர்களா! இதேபோல்தான் இந்தியர்கள் இலங்கைக்குக் கள்ளத்தோணி மூலம் வருகிறார்கள். அதைத்தான் இந்தியாவில் தயார் செய்த படமும் எடுத்துக் காட்டுகிறது" என்கிறார். ஆகையால் இது போன்ற கருத்துள்ள படங்களை எடுக்காமல் நாடு முன்னேற்றமடைய வேண்டிய நல்ல படம் எடுத்தால் பொதுஜனங்கள் அறிவு வளர மிகவும் உபயோகமா யிருக்கும்.

திரிகோணமலை
10—5—53 வை. பழ.

# தயாராய் இருங்கள்

எல்லா நெருக்கடிகளுக்கும்



**GOODYEAR**

**குட் இயர்**

**தாக்கட் சைக்கிள் டயரை பூட்டுங்கள்**




## 29. ஆதிசேஷ வட்டம்

வானத்தில் நக்ஷத்திர மாவட்டம் ஒன்று பூமியையே சுற்றிக் கிடப்பதாகத் தோன்றும். கோடிக் கணக்கான நக்ஷத்திரங்கள் கூடி ஆனது வட்டம்.

வட்டத்தின் குறுக்களவு நம்முடைய கருத்துக்கு எட்டாத அவ்வளவு தூரம்.

ஆனாலும் ஒரு அளவு. ஒளிக்கிரணம் பிரயாணம் செய்யும் வேகத்தை வைத்து கணக்கிட்டுக் கொள்ளுவது வானக் கலைக்கான கணக்கு. ஒரு விநாடியில் ஒன்றே முக்கால் லக்ஷம் மைல் போகும். அப்படிக் கணக்குப் பார்ப்பதில் நக்ஷத்திர வட்டத்தின் குறுக்களவு இரண்டு லக்ஷம் ஒளி வருஷம் என்ற கணக்குக்கு வரும். விநாடி எங்கே, இரண்டு லக்ஷம் வருஷம் எங்கே! அத்தனை பிரம்மாண்டமான வட்டம்.

இந்த வட்டத்தை மேல் நாட்டார் பால்வீதி (மில்கிவே) என்று சொல்லுவார்கள்.

நம்மவர்கள் ஆதிசேஷன் வாசுகி என்றெல்லாம் பெயரிட்டுக் கோடி சூரியப் பிரகாசமான பாம்பு என்று அலங்காரமாய்ச் சொல்லுவார்கள்.

முப்பதினாயிரம் வருஷமாக நம்மவர்கள் ஆதிசேஷனைப் பார்த்து வியந்து அனுபவித்து வந்திருக்கிறார்கள்.

ஆதிசேஷனது நீளத்தை நம்மவர்கள் எப்படிச் சொன்னார்கள்:

வானத்தில் ஒரு சிறு நக்ஷத்திரக் கூட்டம் அதுதான் விஷ்ணுவின் சக்கராயுதம். சக்கராயுதம் ஆதிசேஷ வட்டத்துக்குள் அடங்கி நிற்பதுதான். இப்போது கணக்கைப் பார்க்கலாம்.

சக்கராயுதத்தினளவு முப்பத்திரண்டு லக்ஷம்யோசனை. ஆதிசேஷனது அளவோ மூன்று முப்பத்திரண்டு அதாவது தொண்ணூற்று ஆறு லக்ஷம் யோசனை.

"கறங்காழி நாலெட்(டு)
இலக்கமீ யோசனை,
கட்செவி யின்
பிறங்காழி மும்மை
இலக்கமீ யோசனை!

[கறங்காழி: சுற்றுகிற சக்கராயுதம்; கட்செவியின் பிறங்காழி: ஆதிசேஷனது பிரகாசமான வட்டம்]

இப்படிப் போட்டார் கணக்கைப் பிள்ளைப் பெருமாளையங்கார்.

மூளையைக் குழப்புகிற கணக்கெல்லாம் போதும்.

ஆனந்த அனுபவத்துக்கு வரலாம் இனி.

இறைவன் இறுதியில்லாத இடம் எங்கும் நிறைந்த பொருள். அவனுக்கு ஆதிசேஷனைக் குடை என்கிறார்கள். சிம்மாசனம் என்கிறார்கள். பாதரட்சை என்கிறார்கள். அடுத்தாற்போல் பாற்கடலில் மிதப்பதற்கு படகு என்கிறார்கள்.

ஆதிசேஷனது பிரகாசத்தை வைத்து விஷ்ணு மூர்த்திக்கு விளக்கு என்கிறார்கள். உடுப்பதற்குப் பட்டாடை, படுப்பதற்கான படுக்கை என்றும் சொன்னார்கள். இறுதியில்லாத வியாபகத்தை அளப்பதற்கு இந்த விதமாக எல்லாம் கருவியாகக் கொண்டார்கள்.

சென்றால்க் குடையாம்
இருந்தால்ச்சிங் காசனமாம்
நின்றால் மரவடியாம்
நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம்
பூம்பட்டாம் துஞ்சும்
அணையாம் திருமாற்(கு)
அரவு.

[மரவடி: பாதரட்சை; புணை: மிதப்பு; துஞ்சும் அணை: படுக்கும் படுக்கை; அரவு: பாம்பு.]

என்று அனுபவித்துப் பாடினார் பொய்கை ஆழ்வார்.

இனி சித்தர்கள் அனுபவித்துப் பாடுகிறதைப் பார்க்கலாம். பாம்பாட்டிச் சித்தர் பாடுகிறார்.

பாம்பாட்டிச் சித்தர் தம்முடைய பாம்போடு விளையாடுகிறார். ஆதிசேஷ வட்டத்தை லட்சியமாக வைத்துச் சாதாரணப் பாம்போடு விளையாடுகிறகாரியம்.

*குற்றம்அற்ற சிவனுக்குக்
குண்டலம்ஆ னாய்
கூறும்திரு மாலினுக்குக்
குடையா னாய்
கற்றைக்குழல் பார்வதிக்குக்
கங்கணம்ஆ னாய்
கரவாமல் உளம்கனிந்(து)
ஆடுபாம் பே.

குண்டலம், குடை, கங்கணம் இவைகளை வைத்து இறுதியில்லாத பொருளை அளக்கிறார் பாம்பாட்டிச் சித்தர்.

---

* இந்தக் கவிதையில் காணும் காட்சிகளை நமது சித்திரக்காரர் வண்ண ஓவியமாக இந்த இதழ் அட்டைப் படத்தில் தந்திருக்கிறார்.



● சென்னை தேசிய வாலிபர் காங்கிரஸார் இவ்வாண்டு திருவள்ளுவர் திருவிழாவைச் சிறந்த முறையில் கொண்டாடினார்கள். அன்றைய தினம் காலையில்,

"பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"

என்னும் வள்ளுவர் வாக்குக்கு இணங்க, நூற்றுக் கணக்கான ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் செய்தார்கள். சென்னைச் சட்டசபை சபாநாயகர் கனம் சிவசண்முகம் பிள்ளை அவர்களும் நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் அவர்களும் அன்னதான கைங்கர்யத்தை ஆரம்பித்து வைத்த வைபவத்தைப் படங்களில் காணலாம்.

மாலையில் திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் (எம். எல். ஸி.) கோகலே மண்டபத்தில் வள்ளுவர் விழாவை யொட்டிய செவிக்குணவு விருந்தை ஆரம்பித்து வைத்தார். கனம் சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை வகிக்க, பேராசிரியர் ஸ்ரீ அ. சீனிவாசராகவன் முதலியோர் வள்ளுவரின் வான் புகழ் பெருமையை இனிய தமிழில் எடுத்துரைத்தார்கள். தேசிய வாலிபர் காங்கிரஸின் தலைவர் மேயர் ஸ்ரீ செங்கல்வராயன், திருக்குறள்



பரிசுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு வழங்கினார்.

ஸ்ரீமதி எம்.எல். வசந்தகுமாரியின் இசைக் கச்சேரியுடன் திருவிழா இனிது முடிவுற்றது.

மாயூரம் ஸ்ரீ விசுவநாத சாஸ்திரியார் திருக்குறள் வரிகளை அப்படி யப்படியே வைத்து அமைத்திருந்த இரண்டு திருக்குறள் கீர்த்தனங்களை ஸ்ரீமதி வசந்தகுமாரி பாடியது பெரிதும் பாராட்டத்தக்கது.

முதன் மந்திரி ராஜாஜி கோகலே மண்டபத்தில் நடந்த வைபவங்களுக்கு விஜயம் செய்து நிகழ்ச்சிகளை ரஸித்துக் கொண்டிருந்தது விழாவுக்குச் சிறப்பை அளித்தது.



போட்டோ:- எம். டி. கணேஷ்.



மிருதுவான இளமைச் சருமத்திற்கு




# பாமோலிவ் அழகு சோப்

புஷ்பப் புதிய வாசனை • அடர்ந்த க்ரீம் நுரை • நீடித்து உழைப்பது

சோப்பு மட்டுமல்ல — ஓர் அழகு சாதனம்!

---





ஜே. பி. மங்காராமின்

பிரசித்திபெற்ற

## பிஸ்கோத்துகள்







- மிருதுவானது
- ருசியுள்ளது
- மொறுமொறுப்பானது

ஜே. பி. மங்காராம் & கம்பெனி, குவாலியர்

மதராஸ் ஏஜண்டுகள் : நேஷனல் ஏஜன்ஸிஸ், 1/94, ராமசாமி தெரு, மதராஸ்-1

# முனிவரின் சாபம்

குண்டுமணி



தனபாலன் வேதபுரி நகரத்தில் பெரிய வியாபாரி ஒருவரின் புதல்வன். அவன் தந்தை கடல் கடந்து வாணிபம் செய்து திரண்ட செல்வம் திரட்டி வைத்து விட்டுப் போனார்.

தனபாலின் உறவினர்கள் அவனை ஏமாற்றிச் சொத்தை அபகரித்துக் கொண்டனர். மாட மாளிகையில் வாழ வேண்டிய தனபால் ஒரு வேளை அன்னத்துக்கும் கஷ்டப்பட நேர்ந்து விட்டது.

வருஷங்கள் பல உருண்டன. தனபால் மங்களபுரி தேசத்தின் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்தான். கடும் கோடை வெய்யில் தகித்துக் கொண்டிருந்தது.

கடும் வெய்யிலில் ஒரு வயதான கிழவர் காலில் செருப்பில்லாது குதித்துக் கொண்டே சென்றார். அவர் பரிதாபக் கோலம் தனபாலின் உள்ளத்தைப் பெரிதும் நெகிழச் செய்தது.

அவன் அக்கிழவரின் அருகில் நெருங்கி, "ஐயா! தாங்கள் தள்ளாத காலத்தில் இந்தக் கடும் வெய்யிலில் கஷ்டப் படுகிறீர்களே! என்னுடைய செருப்பை அணிந்து கொண்டு செல்லுங்கள்" என்று கூறித் தன் காலிலிருந்த செருப்பைக் கழற்றி அவரிடம் கொடுத்தான்.

வயதான கிழவர் அவன் பரோபகாரச் சிந்தையைப் பாராட்டி அவனிடமிருந்த செருப்பைப் பெற்றுக் கொண்டார்.

"அப்பா! உன் உதவிக்கு என் நன்றி. நீ செய்த பரோபகாரத்துக்காக இந்த அதிசயப் பாத்திரத்தை எடுத்துச் செல். மங்களபுரியில் கோடையில் தண்ணீருக்காகத் தவிக்கும் மக்களுக்குத் தண்ணீர்ப் பந்தல் நடத்தி அவர்கள் தாகத்தைத் தீர்த்து வை. உனக்கு நிம்மதியான வாழ்க்கையும், கிடைத்தற்கரிய பேறும் கிடைக்கும்" என்று கூறி அக்கிழவர் ஒரு அதிசயப் பாத்திரத்தைக் கொடுத்தார். தனபாலன் அவர் கொடுத்த பரிசைப் பணிவுடன் பெற்றுக் கொண்டான்.

தனபாலன் மங்களபுரி வந்து சேர்ந்தான். மங்களபுரியின் ராஜ பாதையில் ஒரு பெரிய தோட்டமிருந்தது. அத்தோட்டத்தில் வேலைக்கமர்ந்தால் தன் வயிற்றுப் பாட்டைப் பார்த்துக் கொண்டு தண்ணீர்ப் பந்தலும் நடத்தலாம் என்று எண்ணினான். அந்த யோசனையின்படி அவன் அத்தோட்டச் சொந்தக்காரரை அணுகி வேலை கேட்டான். தோட்டச் சொந்தக்காரரும் அதற்குச் சம்மதித்தார். தனபாலன் தோட்டக் குடிசையில் குடியிருந்து தோட்டத்தைப் பண்படுத்தி வந்தான்; தண்ணீர்ப் பந்தலும் வைத்து நடத்தி வந்தான். பெரியவர் அன்று கொடுத்த அதிசயப் பாத்திரம் வேண்டிய அளவு தண்ணீரைப் பெரிய அண்டாக்களில் கொண்டு வந்து நிரப்பியது. பாதசாரிகள் தனபாலின் பரோபகாரத்தை மெச்சிப் பாராட்டி விட்டுச் சென்றனர். அந்தப் பாராட்டுதலில் தனபாலன் மனத்திருப்தி யடைந்தான்.

கோடை கழிந்தது; மழைக்காலம் வந்தது. தனபாலன் தண்ணீர்ப் பந்தல் நடத்துவதை நிறுத்தி விட்டான்.

அன்று தனபாலன் மங்களபுரியிலிருந்து புறப்பட ஆயத்தமானான். முதியவர் கொடுத்த அதிசய பாத்திரத்தை எடுத்துக் கொள்ளத் தேடினான். என்ன அதிசயம்! அதை யாரோ அபகரித்துச் சென்று விட்டார்களே? தனபாலன் அதைக் கண்டு அப்படியே பிரமித்துப் போய் விட்டான்.

சிறிது நேரங் கழிந்து அவன் வீட்டை நோக்கி மேள தாள வாத்தியங்களுடன் பிரமாதமான ஊர்வலம் ஒன்று வந்தது. அந்த ஊர்வலத்தைப் பார்க்கக் குடிசையிலிருந்து வெளியே வந்தான்.

பட்டுப் பட்டாடை யணிந்த பிரமுகர் ஒருவர் தனபாலின் அருகில் வந்து,

"ஐயா! தாங்கள்தானே தனபாலர்? தங்களை அரசர் ராஜ மரியாதையுடன் அரண்மனைக்கு அழைத்து வரச் சொன்னார்" என்றார். தனபாலுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவருடைய வார்த்தைக்குக் கட்டுப் பட்டு அவருடன் அரண்மனைக்குச் செல்லச் சம்மதித்தான்.

தனபாலனை ராஜ மரியாதையுடன் அரண்மனைக்கு ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். அரண்மனை வாசலில் மங்களபுரி மன்னன் பூமாலைகளைத் தனபாலனுக்கு மகிழ்ச்சியுடன் அணிவித்தான்.

தனபாலன் வியப்பில் மூழ்கிப்போய், "அரசே! எனக்கு இத்தகைய உபசாரங்கள் செய்வதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான்.



"தனபாலரே! தாங்கள் என் தந்தையை முனிவரின் சாபத்திலிருந்து மீட்டுத் தந்தீர்கள்" என்றான் மங்களபுரி மன்னன்.

"அரசே! தாங்கள் தயவு செய்து சற்று விவரமாக எனக்கு விளங்கும்படி சொல்லுவீர்களா?" என்று கேட்டான் தனபாலன்.

"ஐயா! வாருங்கள். அரண்மனைக்குள் சென்று உங்களுக்கு அதை விவரிக்கிறேன்" என்று கூறி அவரை அரசன் அரண்மனைக்குள் அழைத்துச் சென்று முனிவரின் சாபத்தை விளக்கினான்.

"தனபாலரே! ஐந்து வருஷங்களுக்கு முன் மங்களபுரியில் தண்ணீர்க் கஷ்டம் அதிகமாயிருந்தது. மக்கள் தண்ணீரில்லாது வாடி மடிந்தனர். என் தந்தை அவர்களுடைய கஷ்டத்தைத் தீர்க்காது கிடைத்த தண்ணீரையும் தம்முடைய கேளிக்கைகளுக்காகப் பயன் படுத்தினார். என் தந்தையின் செய்கையைக் கண்டு கோபமுற்ற முனிவர் ஒருவர் என் தந்தையிடம், 'நீ பிறர் தாகத்தினால் வருந்துவதைப் புரிந்து கொள்ளாமல் கேளிக்கைகளுக்குத் தண்ணீரைச் செலவிடுகிறாய். நீ ஒரு பாத்திரமாக மாறிப் போகக் கடவாய்' என்று சபித்து விட்டார். என் தந்தை அவர் காலில் விழுந்து கெஞ்சவே, பிறர் கஷ்டத்தை அறிந்து தீர்க்கும் ஒருவன் கையினால் உனக்கு விமோசனம் கிடைக்கும்' என்று அருளி விட்டுச் சென்றார். நீங்கள் என் தந்தையின் சாப விமோசனத்துக்கு உதவினீர்கள். தங்களுக்கு ஒரு பெரியவர் அதிசயப்பாத்திரம் கொடுத்தார் அல்லவா? அவர்தான் முனிவர். அந்தப் பாத்திரந்தான் சாபம் பெற்று உருமாறிய என் தந்தை. கோடை காலம் முழுவதும் அவர் தண்ணீர்ப் பந்தலுக்கு வேண்டிய தண்ணீரைக் கொண்டு வந்து கொட்டினார். என் தந்தையின் சாபம் தீர்ந்து, அவர் பழைய உருவைப் பெற்று விட்டார். இதோ இருக்கிறாரே இவர்தான் என் தந்தை. தனபாலரே! இன்று முதல் தாங்கள்தான் மங்களபுரியின் மந்திரி!" என்றான் அரசன்.

அரசனின் வேண்டுகோளுக் கிணங்கித் தனபாலர் மந்திரிப் பதவியை ஏற்றுக் கொண்டார். மங்களபுரியில் அவர் வந்த பிறகு எந்தக் குறையும் ஏற்படவில்லை.

## சோஷலிஸக் கட்டுரைக்கு நூறு ரூபாய் பரிசு

"சோஷலிஸம் ஏன் வேண்டும்?" என்னும் தலைப்பில் எழுதப்படும் கட்டுரைகளில் சிறந்தது என்று ஆசிரியர் கருதும் கட்டுரைக்கு ரூபாய் நூறு பரிசு வழங்கப்படும். கட்டுரை, வாசகர்கள் ரஸித்துச் சுவையுடன் படிக்குமாறு எளிய தமிழில் அமைந்திருக்க வேண்டும்.

கட்டுரைகள் நாளது 1953-ம் ஆண்டு ஜூன் மாதம் 30-ம் தேதிக்குள் காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும்.

சோஷலிஸ இயக்கத்தின் அடிப்படைத் தத்துவங்கள், சோஷலிஸத்தினால் பாரத தேசம் அடையக் கூடிய நன்மைகள், இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் முன்னணி வேலைத் திட்டம், அக் கட்சியின் தற்போதைய நிலை, கட்சியை வலுப் படுத்துவதற்குரிய யோசனைகள், சோஷலிஸ்ட் இலட்சியத்தையும் வேலைத் திட்டத்தையும் மக்களிடையே பரப்புவதற்குச் சிறந்த வழிகள்,—இவை யெல்லாம் போட்டிக் கட்டுரைக்கு விஷயமாக அமையலாம். இவற்றில் ஏதேனும் சில அம்சங்களைப் பற்றியும் எழுதலாம்.

கட்டுரை, "கல்கி" இதழில் நாலு பக்கங்களுக்குக் குறையாமலும் எட்டுப் பக்கங்களுக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும்.

பரிசு பெறும் கட்டுரையைத் தவிர, பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் நல்ல கட்டுரைகளுக்கு உசிதம் போல் சன்மானம் வழங்கப்படும்.



சூரிய அஸ்தமன சமயத்தில் எவரெஸ்டு சிகரத்தின் கண்கொள்ளாக் காட்சி

விறைத்துவிடும். தண்ணீர் சில விநாடி நேரத்தில் பனிக் கட்டியாகி விடும் அத்தகைய பயங்கரமான கால நிலையைச் சமாளிப்பதற்கு எவ்வளவு தேகதிடமும் மனோபலமும் எத்தனை யந்திர சாதனங்களும் அவசியம் என்பதைக் கற்பனை செய்து கொள்வதும் கடினமான காரியம்.

எனினும், விஞ்ஞான அற்புதங்களின் உதவியால் இயற்கையைக் கொஞ்சம் கொஞ்சமாக வென்று வரும் வீரர்கள் மேற்படி ஆபத்துகளைக் கண்டு மனம் சோர்ந்து விடவில்லை. புதிய புதிய கோஷ்டியினர் முன் வந்து மீண்டும் மீண்டும் முயன்று வந்தார்கள். அதன் பலனாக, தோல்விகளையும் கஷ்ட நஷ்டங்களையும் கண்டு அஞ்சாத மனிதரின் விடா முயற்சியைக் கண்டு இயற்கை இரங்கி, இறுதியில் அகில உலகமும் புகழும் மாபெரும் வெற்றியைக் கொடுத்திருக்கிறது.

உலகில் உள்ள மலைகளுக்கு எல்லாம் மாமலையாக விளங்கும் கம்பீரமான இமயமும் அதன் சிகரங்களும் வெகுகாலமாக மலையேறும் நிபுணர்களின் கவனத்தைக் கவர்ந்து வந்திருக்கின்றன.

சுமார் ஆயிரத்து ஐந்நூறு மைல் நீளமும் இருநூறு மைல் அகலமும் உள்ள இமய மலையைப் போன்ற பெரியமலை உலகில் வேறு எந்த நாட்டிலும் இல்லை.

இமய மலையின் கிரீடங்களாக விளங்கும் சிகரங்களைப் போல் உயரமானவை உலகில் வேறு எந்த மலையிலும் இல்லை.

உலகத்திலுள்ள மலைச் சிகரங்களில் 29,002 அடி உள்ள எவரெஸ்டு தான் முதல் ஸ்தானத்தை வகிக்கிறது.

உலகத்தில் இரண்டாவது ஸ்தானத்தை வகிக்கும் காரகோரம் சிகரத்தின் உயரம் 28,191 அடியாகும்.

28,146 அடி உயரம் உள்ள காஞ்சனகங்கா சிகரம் மூன்றாவது ஸ்தானத்தை வகிக்கிறது. இது எவரெஸ்டு சிகரத்திலிருந்து நூறு மைல்களுக்கு அப்பால் நேப்பாள—சிக்கிம் எல்லையில் இருக்கிறது.

இமய மலையிலுள்ள மற்ற முக்கிய சிகரங்களின் விவரம்:

மாகாளி 27,790 அடி, தவளகிரி 26,795 அடி, கோமனஹரி 24,000 அடி, கௌரி சங்கர் 23,400 அடி, கைலாஸ் 21,982 அடி.

புனித ஸ்தலமாக விளங்கும் கைலாச சிகரத்தின் அடிவாரத்தில் மானசரோவர் தீர்த்தம் இருக்கிறது.

* * *

மேலே குறிப்பிட்ட மற்றச் சிகரங்களின் உச்சியைக் கண்டு பிடிக்க நிபுணர்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டார்கள். எனினும் எவரெஸ்டு சிகரத்தைப் போல் மற்றச் சிகரங்களைக் கண்டு பிடிப்பதில் அவ்வளவு அதிக உயிர்ச் சேதமும் சோதனைகளும் ஏற்படவில்லை.

எவரெஸ்டு சிகரத்தின் உச்சியை அடைய வேண்டும் என்ற முயற்சி முதன் முதலாக 1921ம் வருஷத்தில் ஆரம்பமாயிற்று.

அப்போது கர்னல் ஹாவர்ட் பெரி தலைமையில் ஒரு பிரிட்டிஷ் கோஷ்டியார் எவரெஸ்டு சிகரத்தின் உச்சியில் ஏறுவதற்காகப் புறப்பட்டு வந்தனர். மேற்படி கோஷ்டியைச் சேர்ந்த ஜார்ஜ் மல்லாரியும் மற்றும் மூவரும் இருபத்து மூவாயிரம் அடி உயரம்தான் ஏறுவதற்கு முடிந்தது.

அவர்கள் சென்ற பாதை வழியாக, 1922–ல் மற்றொரு பிரிட்டிஷ் கோஷ்டியார் புறப்பட்டுச் சென்றனர். அவர்கள் எவரெஸ்டு சிகரத்தில் இருபத்தேழாயிரம் அடி உயரம் வரையில் ஏறிவிட்டுத் திரும்பி விட்டார்கள். அதற்கு மேல் ஏறுவதற்கு அவர்களால் முடியவில்லை. மேற்படி முயற்சியில், நிபுணர்களுக்கு மூட்டைகள் தூக்கிச் சென்ற ஏழு போர்ட்டர்கள் உயிரிழந்தார்கள்.

1924-ல் பிரிட்டிஷ் கோஷ்டியைச் சேர்ந்த சமர்வெல், நார்ட்டன் இருவரும் 28,100 அடிக்கு மேலே ஏறிச் செல்ல முடியாமல் திரும்பி வந்துவிட்டனர்.

புனித ஸ்தலமான கைலாச சிகரத்தின் தோற்றம்



அதே வருஷம் மல்லாரி, இர்வின் என்ற இரு பிரமுகர்கள் எவரெஸ்டு சிகரத்தில் 28,300 அடி வரையில் ஏறிவிட்டார்கள். சிகரத்தின் உச்சியை அடைவதற்கு இன்னும் எண்ணூறு அடிகள் தான் இருந்தன. வெகு தூரத்திலிருந்து அவர்களைப் பூதக் கண்ணாடியினால் பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கு மலையுச்சிக்கு இரண்டு எறும்புகள் ஏறுவதுபோல் தோன்றியது.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவர்களைத் திடீரென்று கருமேகங்கள் சூழ்ந்து கொள்வதுபோல் தோன்றியது. அதன்பின் அவர்களின் கதி என்ன ஆயிற்று என்பது யாருக்கும் தெரியாது.

மல்லாரி, இர்வின் இவர்களின் மரணம் மலையேறும் நிபுணர்களுக்குப் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தது. அதனால், அதிலிருந்து ஒன்பது வருஷ காலம் வரையில் எவரெஸ்டு சிகரத்தில் ஏற யாரும் முயற்சி செய்யவில்லை.

பிறகு 1933-ல் ரட்லெட்ஜ் என்ற பிரமுகரின் தலைமையில் ஒரு கோஷ்டியினர் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களாலும் 28,100 அடிக்கு மேல் ஏறிச்செல்ல முடியவில்லை. எனினும் அவர்களுடைய முயற்சி முற்றிலும் பலனில்லாமல் போயிற்று என்று சொல்வதற்கில்லை.

ஏனெனில், அங்கே அவர்கள் ஒரு கோடரியைக் கண்டெடுத்தார்கள். மேற்படி கோடரி, ஏற்கெனவே எவரெஸ்டு சிகரத்தில் ஏறும் முயற்சியில் பலியான மல்லாரி அல்லது இர்வினுடையதாக இருக்கலாம் என்று ஊகிக்கப் பட்டது.

1936-ல் மறுபடியும் பிரிட்டிஷ் கோஷ்டியார் எவரெஸ்டு சிகரத்தின் உச்சியை அடைவதற்கு முயற்சித்தார்கள். இறுதியில் அவர்களும் தோல்வியடைந்து திரும்ப வேண்டியதாயிற்று.

கடைசி ஆயிரம் அடியைக் கடந்து சிகரத்தின் உச்சியை அடைவதுதான் எல்லோருக்கும் அசாத்தியமான காரியமாக இருந்தது.

மற்றும் சில கோஷ்டியினர் முயற்சி செய்து பார்த்தபின், சென்ற வருஷம் ஸ்விட்ஜர்லாந்து கோஷ்டியினர் எவரெஸ்டு சிகரத்தில் ஏற இரண்டு தடவை முயற்சித்தனர். ஆனால் இரண்டு தடவையும் அவர்களால் வெற்றிபெற முடியவில்லை. இறுதி வெற்றி பெறுவதற்கான பல தகவல்களை மாத்திரம் அவர்கள் சேகரித்துக் கொண்டு திரும்பி வந்தனர்,

இப்போது வெற்றி பெற்றுள்ள டென்சிங் சென்ற வருஷம் ஸ்விட்ஜர்லந்து கோஷ்டியுடனும் சென்றிருந்தார்.

1933-ம் வருஷம் எவரெஸ்டு சிகரத்தில் ஏறிய ஹியூ ரட்லெட்ஜ் என்ற பிரமுகர் "எவரெஸ்டு—1933" என்று ஒரு நூல் எழுதியுள்ளார். எவரெஸ்டு சிகரத்தில் ஏறுவதற்கு மே மாதம் 7-ந் தேதியிலிருந்து ஜூன் 15-ந் தேதி வரையில்தான் சரியான காலம் என்று குறிப்பிட்டிருக்கிறார். மற்றக் காலங்களில் அங்குள்ள பயங்கரமான கால நிலையில் எவரெஸ்டு சிகரத்தின் உச்சிக்குச் செல்ல முயற்சிப்பது தற்கொலைக்கு ஒப்பாகும் என்றும் அவர் கூறியுள்ளார்.

தம் சொந்த அனுபவத்தின் மூலம் அவர் கூறியிருப்பது முற்றிலும் சரி என்பதை, இப்போது பிரிட்டிஷ் கோஷ்டியினர் அடைந்துள்ள வெற்றி நிரூபித்திருக்கிறது. மேற்படி கோஷ்டியைச் சேர்ந்த டென்சிங்கும் ஹில்லரியும் மே மாதக்



காஞ்சன கங்கா சிகரத்தின் உச்சிக்குச் செல்லும் வீரர்கள்

கடைசியில்தான் எவரெஸ்டு சிகரத்தின் உச்சியை அடைந்து வெற்றிக் கொடி நாட்டினர்.

எவரெஸ்டு சிகரத்தின் உச்சியை அடைவதில் வெற்றி பெற்ற டென்சிங், ஹில்லரி இவ்விரண்டு வீரர்களுக்கும் பிரிட்டிஷ் மகாராணி இரண்டாம் எலிஸபெத் முதல் பல நாடுகளைச் சேர்ந்த பிரதம மந்திரிகளிடமிருந்தும் உலகப் பிரமுகர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்துள்ளன.

ஹில்லரிக்கும் பிரிட்டிஷ் கோஷ்டியின் தலைவரான கர்னல் ஹண்டிற்கும் மகாராணி 'ஸர்' கௌரவப் பட்டம் வழங்கியுள்ளார். டென்சிங் இந்தியர் ஆனதால் அவரைத் தகுந்த முறையில் கௌரவிக்கும் விஷயமாக மகாராணி ஆலோசித்து வருவதாகச் செய்திகள் கூறுகின்றன.

எவரெஸ்டு சிகரத்தின் உச்சியில் முதன் முதலாக ஏறி, பாரத நாட்டின் மணிக் கொடியைப் பறக்க விட்ட டென்சிங்கை இந்திய சர்க்கார் கௌரவித்து, அவருக்குப் பதக்கம் பரிசளிக்கத் தீர்மானித்திருப்பது மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியதாகும். அவருடைய தைரியத்தையும் வீரத்தையும் பாராட்டுவதற்காக அடுத்த மாதம் புது டில்லியில் நடக்கப் போகும் வைபவத்தில் இந்திய ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் அவருக்குப் பதக்கம் வழங்குவார்.

எவ்வளவு பெரிய கஷ்ட நஷ்டங்களையும் கண்டு கலங்காத விடா முயற்சி இறுதியில் மகத்தான வெற்றியைக் கொடுக்கும் என்பதற்கு ஹில்லரி, டென்சிங் இவர்களுடைய வாழ்க்கை உதாரணமாக அமைந்திருக்கிறது. எனவே, அகில உலகத்தின் பாராட்டுதலுக்கும் அவர்கள் முற்றிலும் தகுதி வாய்ந்தவர்கள் என்பதில் ஐயமில்லை.

# அகில உலகச் சிறு கதைப் போட்டி

- இரண்டாவது தடவையாக நடைபெறும் அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குக் கதை அனுப்புவோர் ஜூலை மாதம் முப்பத்தொன்றும் தேதிக்குள் அனுப்ப வேண்டும்.
- சகல எழுத்தாளர்களுக்கும் அதிக அவகாசம் அளிக்க வேண்டும் என்பதற்காகவே முடிவு தேதியை ஜூன் 30-லிருந்து ஜூலை 31ந் தேதிக்கு ஒத்திவைத்திருக்கிறார்கள்.
- இந்தியாவில் தமிழ் உள்பட முக்கியமான பன்னிரண்டு பாஷைகளிலாவது, ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறு கதை எழுதலாம்.
- இந்தியாவில் எழுதப்படும் சிறந்த எட்டுக் கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கும். அதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அந்த எட்டுக் கதைகளிலிருந்து அகில உலகச் சிறு கதைப் போட்டிக்காக நாலு கதைகளைத் தேர்தெடுத்து அனுப்புவார்கள்.
- இதில் கலந்துகொள்ளும் பத்திரிகைகள் தங்கள் தங்கள் பாஷைக் கதைகளுக்குப் பரிசு அளிக்கும்.
- பரிசு பெறும் சகல கதைகளும் போட்டியை நடத்தும் பத்திரிகைகளில் வெளிவரும்.
- கதைகள் பிரசுரமாகி முடிந்த பின், அந்தக் கதைகளில் எது சிறந்தது என்பதை, போட்டியை நடத்தும் பத்திரிகைகளிடையே வோட்டு எடுத்து முடிவு செய்வார்கள்.
- அந்தக் கதைக்கே அகில உலகச் சிறு கதைப் போட்டியான ஐயாயிரம் டாலர் (ரூ. 23,750) கொடுக்கப்படும்.
- தமிழ்க் கதைகளை ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும்.
- சிறு கதை அனுப்புவோர், அது தங்களுடைய சொந்தக் கற்பனையைக் கொண்டு எழுதப்பட்டது என்று உறுதி கூறவேண்டும். ஏற்கெனவே எந்த இடத்திலும் பிரசுரிக்கப்பட்டதல்ல என்று உத்தரவாதம் அளிக்க வேண்டும்.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குப் பொறுக்கி எடுக்கப்படும் நாலு தமிழ்க் கதைகள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 125 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.






கே. ஆர். கௌசல்யா

அப்போது நன்றாக இருட்டத் தொடங்கி விட்டது. வாசற்புற அறையில் சிந்தனை தோய்ந்த முகத்துடன் ஜன்னலுக்கு வெளியே எங்கோ தன் பார்வையைச் செலுத்தியவாறு உட்கார்ந்திருந்தான் ராஜகோபாலன்.

"ஏண்டாப்பா ராஜா!...ஏன் இருட்டிலே உட்கார்ந்திருக்கே! விளக்கைப் போட்டுக்கப் படாதோ!" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்த காமாக்ஷி 'ஸ்விச்'சைப் போட்டுவிட்டுப் பக்கத்திலிருந்த பெஞ்சியின் மேல் உட்கார்ந்து கொண்டாள். அவள் வந்ததைக் கவனித்தாகவே காட்டிக் கொள்ளாமல் ராஜகோபாலன் உட்கார்ந்திருக்கவே மறுபடியும் காமாக்ஷியே பேச்சைத் துவக்கினாள்.

"அப்போ நீ நிச்சயமா ஊருக்குப் போறதுன்னு தீர்மானிச்சுட்டேன்னு சொல்லு" என்றாள் அவள், கால்களை நீட்டிச் சுவரில் சாய்ந்து கொண்டே.

"இதோ பாரு, அத்தை! உனக்கு எத்தனை தரம் சொல்லுவது! இன்னொரு தரம் என்னிடம் இது மாதிரி கேட்காதே! நானாகவா இப்போ வேண்டும் என்று ஊருக்குக் கிளம்புகிறேன்! ஆபீஸிலே நம்ம சட்டமா! மானேஜர் 'போ' என்றால் போகணும், 'இரு' என்றால் இருக்கணும். எல்லாம் அவர் போட்ட உத்தரவு. இதிலே நான் தீர்மானிக்கறதுக்கு என்ன இருக்கு!..." என்று கோபமும், வெறுப்பும் ஒருங்கே கலந்த குரலில் கூறினான் ராஜகோபாலன்.

"என்ன ஆபீஸோ! என்ன மானேஜரோ! அவரும் மனிதர்களோடு பிறந்தவர்தானே! உன்னை ஒரு வார்த்தை கேட்காமல் அதெப்படி அவரே முடிவு செய்யலாம்! எங்களைத் தனியாக இங்கே தவிக்க விட்டு விட்டுச் சின்னக் குழந்தையையும் எடுத்துக் கொண்டு அந்தப் புது ஊர்களிலே போய்க் கஷ்டப்பட முடியாது என்று நீ ஒரு வார்த்தை சொன்னால் அவர் கேட்காமலா போய் விடுவார்!" என்றாள் அவள் பரிவு நிறைந்த குரலில்.

"நம்ப இஷ்டமெல்லாம் அங்கே செல்லாது, அத்தை! இப்போ என்ன முழுகிப் போய் விட்டது என்கிறாய்! இன்னும் ஏழெட்டு மாசத்துக்குத் தானே!"

"அதுவரைக்கும் தான் சொல்லேன்!"

ராஜகோபாலன் அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

"எனக்கென்னடாப்பா தெரியும்! எங்களையெல்லாம் விட்டுட்டு எங்கேயோ தூரத்து ஊருக்குப் போகிறாயே என்று பயித்தியக்கார மனசு அங்கலாய்ப்புப் படுகிறது. குழந்தை ரவி இங்கே இல்லாமல் வீடே வெறிச்சுனு போயிடப் போறது. சரி நீ போய்ச் சாப்பிடு. இன்னிக்கு டிபன் கூட இல்லையே, காலையில் சாப்பிட்டது" என்று சொல்லிவிட்டுத் தலைப்பை விரித்துக் கொண்டு பெஞ்சியின் மேல் படுத்துவிட்டாள் காமாக்ஷி.

"என்னு! அந்தச் சின்ன டிரங்கை எடுத்து இப்படி வையுங்கோ! போய் இறங்கியவுடனே முக்கியமா

கத் தேவையாயிருக்கிற சாமான்களை அதில் வைக்கலாமே! டிரங்கிலே யிருக்கிற கூஜாவை மறக்காமல் வெளியே எடுத்து வையுங்கோ!" என்று அடிக்கொருமுறை கூடத்துப் பக்கம் வந்து தன் கணவனிடம் உற்சாகம் ததும்பும் குரலில் உத்தர விட்டுச் செல்வதும், ஊருக்குச் செல்லும் மகிழ்ச்சியில் குழந்தை ரவியை நிமிஷத்திற்கொரு தடவை கொஞ்சுவதுமாகப் பட்டாம்பூச்சியைப் போல் வீடு முழுவதும் துள்ளிப் பறந்து கொண்டிருந்தாள் வைதேகி.

கடைசியில் ஒரு வழியாகத் தயார் செய்த சாமான்களைச் சரிபார்த்துப் பெட்டிகளைப் பூட்டிச் சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டு, "வைதேகி! வைதேகி!" என்று அழைத்துக் கொண்டே சமையலறைப் பக்கம் வந்தான் ராஜகோபாலன்.

கணகணவென்று காளவாய் போல் எரிந்து கொண்டிருந்த அடுப்படியில் உட்கார்ந்து உடலெங்கும் ஆறாகப் பெருகிக் கொண்டிருக்கும் வியர்வையைத் துடைத்துக் கொள்ளக்கூட அவகாசமின்றி, ஊருக்குச் செல்பவர்களுக்கு வழிக்குக் கொடுத்தனுப்ப பக்ஷணங்கள் செய்து கொண்டிருந்தாள் காமாக்ஷி. "ஏன் அம்மா, நீங்க எப்போ இதையெல்லாம் செய்து முடித்து நான் மூட்டை கட்டி வைக்கிறது! ரயிலுக்கு நாழியாகி விட்டது என்று 'அவர்' கோபித்துக் கொள்ளப் போகிறார்!" என்று சொன்னாள் வைதேகி.




"இதோ ஆய்விட்டது, அம்மா! நானும் பரக்கப் பரக்கத்தான் செய்கிறேன். மற்ற எல்லா மூட்டை முடிச்சுகளையும் தயார் செய்து கொள். கடைசியிலே இதைத் தனியாக ஒரு பையிலே வைத்துக் கொண்டால் போயிற்று!" என்று அவளுக்குச் சமாதானம் கூறிக் கொண்டே மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருந்தாள் காமாக்ஷி.

அவ்வளவு நேரமும் ஊருக்குக் கிளம்புவதில் பிரமாதமான உற்சாகத்துடனிருந்த ராஜகோபாலனின் உள்ளத்தில், அந்தக் காட்சி ஏதோ ஒரு வேதனையைப் பாய்ச்சியது. வைதேகியிடம் ஏதோ சொல்வதற்காக வந்த அவன் தான் சொல்ல வந்ததையும் மறந்து பிரமை பிடித்தவன் போல் நின்று கொண்டிருந்தான். பிறகு தன்னைச் சிறிது சமாளித்துக் கொண்டு, "அத்தை! எங்களுக்கு ரயிலுக்கு நாழியாகிறது. நீ எதுக்கு இப்போ இந்த வீண் சிரமமெல்லாம் படணும்!...இதெல்லாம் பண்ணு விட்டால் என்ன!" என்றான்.

"இதோ ஆகிவிட்டது, அப்பா! வைதேகி! சித்நேரம் நீயும் அவனோடு உட்கார்ந்து கொள்" என்று சொல்லிக் கொண்டே பரபரப்புடன், பக்ஷணங்களை மூட்டை கட்டினாள் அத்தை.

பெட்டி படுக்கைகளை டாக்ஸியில் ஏற்றிவிட்டு வைதேகி குழந்தையுடன் ஏறிக் கொண்டவுடன் "நான் போய் வருகிறேன், அத்தை!" என்று விடை பெற்றுக் கொண்டு தானும் டாக்ஸியில் ஏறிக் கொண்டான் ராஜகோபாலன்.

"அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிரு அப்பா" என்றார் ஹரிஹரய்யர்,

அதற்குள் சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் ஹரிஹரய்யரை அழைத்தாள், ரேழியில் நின்று கொண்டிருந்த காமாக்ஷி.

"ஏன், நீங்களும்தான் ஸ்டேஷனுக்குப் போய் விட்டு வாருங்களேன். போர்ட்டர் அமர்த்தி, சாமானை ரயிலிலே ஏற்றி, டிக்கட் வாங்கி எல்லாத்தையும் அவன் ஒருத்தனே எப்படிச் செய்வான் !" என்றாள் தழதழத்த குரலில்.

"உம்..." என்று கூறிய ஹரிஹரய்யர் ஏதோ அவளுடைய வற்புறுத்தலுக்காகச் செய்பவர் போல், "நானும்தான் ஸ்டேஷன் வரைக்கும் வருகிறேனே !" என்று சொல்லிக் கொண்டே டாக்ஸியில் ஏறிக் கொண்டார்.

'விர்'ரென்று டாக்ஸி புறப்பட்டது. ராஜகோபாலன் இறுதியாக ஒருமுறை திரும்பிப் பார்த்தான். தன் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரை முந்தானையால் துடைத்துக் கொண்டு நின்ற காமாக்ஷியின் தோற்றம் அவன் மனத்திரையில் சித்திரம் போல் பதிந்தது.

ராஜகோபாலன், அவன் மனைவி, குழந்தை எல்லோரும் ரயிலேறி உட்கார்ந்தவுடன், அவன் ஏறியிருந்த பெட்டியின் மீது சாய்ந்தவாறு பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த ஹரிஹரய்யர் இரண்டாவது மணியும் அடித்து ரயில் கூவிடவே ராஜகோபாலனிடம் விடை பெற்றுக் கொண்டார்.

ஸ்டேஷன் கண்ணுக்கு மறைந்த பிறகும் கூடத் தன்னை மறந்து வெளியே தலையை நீட்டியபடியே எங்கோ தன் பார்வையைப் பதித்தவாறு உட்கார்ந்திருந்தான் ராஜகோபாலன். அன்பும், சாந்தமும் தாண்டவமாடும் முகத்துடன் ரயிலைத் துரத்திக் கொண்டு — தன்னைத் தேடிக் கொண்டு — காமாக்ஷி வருவதாக அவனுக்குப் பிரமையுண்டாயிற்று. கடைசியாக அவன் புறப்படும் போது கண்களில் சுரந்து நின்ற கண்ணீரைத் தன் புடவைத் தலைப்பால் துடைத்தவாறு நின்றுகொண்டிருந்த அவனுடைய அத்தையின் தோற்றத்தை நினைத்த போது அவன் கண்கள் கலங்கி நின்றன.

'என்ன ஆபீஸோ ! என்ன மானேஜரோ ! உன்னை ஒரு வார்த்தை கேட்காம அவர் எப்படி முடிவு செய்யலாம் ! எங்களை இங்கே தனியே தவிக்க விட்டுவிட்டு சின்னக் குழந்தையும் எடுத்துக் கொண்டு, அந்தப் புது ஊர்களிலே என்னாலே முடியாது என்று ஒரு வார்த்தை சொன்னால் கேட்காமலா போய் விடுவார் !' என்று அன்று காமாக்ஷி கூறிய வார்த்தைகள் ரயிலின் ஓயாத சப்தத்தினிடையிலும் அவன் சிந்தனையில் எதிரொலித்துக் கொண்டிருந்தன.



கணவன் :—நம்ம 'கஞ்சன்' சோமண்ணா வீட்டிலிருந்து என்னை டின்னர் சாப்பிடக் கூப்பிட்டு விட்டுப் போனார்கள்.

மனைவி :—கூப்பிட்டால் சாப்பிட்டு விட்டு வாருங்களேன். அதற்கு ஏன் வேதனைப் பட்டுக் கொண்டு இருக்கிறீர்கள் ?

கணவன் :—'டின்னர்' ராத்திரி எட்டு மணிக்குத்தான் இருக்கும். ஐந்து மணிக்கே வரச் சொல்லி இருக்கிறானே, ஒரு வேளை சமைப்பதற்காகக் கூப்பிட்டிருக்கிறானோ என்று தான் கவலையாக இருக்கிறது !

*　　　*　　　*

பெற்றோரை இழந்து திக்கற்று நின்றுவிட்ட காரணத்தால் ராஜகோபாலனைக் காப்பாற்றிக் கரை சேர்த்து, அவனுடைய வாழ்க்கைப் பாதையை வகுத்துக் கொடுக்கும் பெரியதொரு பொறுப்பை அவனுடைய அத்தை காமாக்ஷியும் அவள் கணவர் ஹரிஹரய்யரும் ஏற்றுக் கொண்ட போது அவனுக்கு வயது பன்னிரண்டு. தம் வயிற்றில் பிறந்த மூன்று பெண்களுடன் நான்காவதாகப் பிறந்த பிள்ளையாகத்தான் அவனை பாவித்தனர் ஹரிஹரய்யர் தம்பதிகள். ராஜகோபாலன் அந்தக் குடும்பத்தில் வந்து சேர்ந்த பிறகுதான் அவனுடைய அத்தை பெண்கள் மூவருக்குமே அடுத்தடுத்து விவாகமாயிற்று.

அப்போது ராஜகோபாலன் இண்டர் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். அடுத்தடுத்து மூன்று பெண்களுக்கும் செய்து வைக்கும் செலவுகளுடன், அவனுக்குக் கல்லூரிப் படிப்பு சொல்லி வைக்கும் பெரியதொரு செலவையும் ஏற்றுக் கொண்டு திணறித் திண்டாடும் தன் அத்திம்பேரைக் கண்டு, பரிதாபப்பட்டுத் தன் படிப்பை வேண்டுமானால் நிறுத்தி விடுவதாகக் கூறினான் ராஜகோபாலன். ஆனால், 'இந்தச் செலவுகளுக்கெல்லாம் பார்த்தால் முடியுமா ! இப்போ எங்க வயிற்றிலேயே ஒரு பிள்ளை பிறந்திருந்தால் கஷ்டமோ, நஷ்டமோ, எப்பாடு பட்டாவது ஆரம்பிச்சதை முடிக்கத் தோணுமே தவிர, இப்படி அரைகுறையிலே நிறுத்தணும்னு தோணுமா !' என்று கூறிய காமாக்ஷி எப்படியோ விடாப்பிடியாக முன் நின்று ஹரிஹரய்யரிடம் கூறித் தன் மருமானை, 'ராஜகோபாலன் பி. ஏ.' வாக ஆக்கிவிட்டாள். அதிர்ஷ்டவசமாக, சென்னையில் மோட்டார் கம்பெனி யொன்றில் நல்ல சம்பளத்தில் அவனுக்கு வேலையும் கிடைத்து விட்டது. காமாக்ஷிக்குப் பெருமை பிடிபடவில்லை.

வேலை கிடைத்த சில நாட்களுக்குள்ளேயே ராஜகோபாலனைத் தேடிக் கொண்டு ஒரு வரன் வந்தது. அக்கௌண்டண்ட் ஜெனரலாபீஸில் நல்ல சம்பளத்தில் வேலையிலிருந்த சபேசய்யர் தம் ஒரே பெண் வைதேகியை நல்ல சீர் செனத்தி வரதக்ஷிணையுடன் அவனுக்குக் கொடுப்பதற்கு முன்வந்தார்.

விவாகமாகிச் சில நாட்களுக்கெல்லாம் வைதேகி புக்ககத்திற்கு வந்தாள். 'வைதேகி ! வைதேகி !'

என்று அடிக்கொரு முறை அன்பொழுக அழைத்து மகிழ்ந்து கொண்டிருந்தாள் காமாக்ஷி. வைதேகியும் பெரிய மனிதர் பெண் என்ற சலுகை கொண்டாடி வேலை செய்து உடம்பை அலட்டிக் கொள்ளாமல் உட்கார்ந்திராதபடி, காமாக்ஷி கூப்பிட்ட குரலுக்கு 'ஏன்' என்று கேட்டுக் கொண்டு அவளை உட்கார வைத்து ஓடியாடிக் காரியங்கள் செய்து கொண்டிருந்தாள். இதனிடையில் அவ்வப்போது புக்ககத்திலிருந்து காமாக்ஷியின் பெண்கள் ஒருவர் மாற்றி ஒருவர் வந்து போய்க் கொண்டிருந்தனர். தன் வயிற்றில் பிறந்த சொந்தப் புதல்வனாக இல்லாவிட்டாலும், தான் பெறாமல் பெற்ற அருமைப் புதல்வனாகிய ராஜகோபாலன் இவ்வளவு பெரியவனாக வளர்ந்து அவனுக்கும் விவாகமாகி நாட்டுப்பெண் ஒருத்தி வந்து, அவள் தன்னையும், அலுப்பாற்றிக் கொள்ள மாற்றி மாற்றிப் பிறந்தகம் வரும் தன் பெண்களையும் உட்கார வைத்து எல்லாம் செய்கிறாள், என்பதை எண்ணிப் பார்த்த காமாக்ஷி, தன்னைவிட அதிர்ஷ்டசாலி இந்தப் பூலோகத்திலேயே யாருமில்லை என்று எண்ணிப் பூரித்துப் போனாள்.

அப்போது வைதேகிக்கு ரவி ஏழு மாதக் குழந்தை. அவளையும், குழந்தையையும் பார்த்து விட்டுச் செல்வதற்காக வந்திருந்தாள் வைதேகியின் தாயார் லக்ஷ்மி. அவள் வந்திருந்த சமயம் காமாக்ஷியின் மூன்றாவது பெண் இரண்டாம் பிரசவத்திற்காகப் பிறந்தகம் வந்திருந்தாள். 'உடம்பு சரியில்லை' என்று அவள் சுருண்டு சுருண்டு படுப்பதையும், அவளுடைய முதல் பிள்ளை ராஜுவை, காமாக்ஷி கொஞ்சிக் கொஞ்சிக் குலாவுவதையும் அவர்களை உட்கார வைத்து விட்டுத் தன் பெண் வைதேகி ஒரே யடியாக வீட்டுக் காரியங்கள் செய்வதையும் கண்டு லக்ஷ்மிக்கு உள்ளம் கொதித்தது.

"ஏண்டி வைதேகி! ஆனாலும் உன் புத்தி இப்படிக் கெட்டுப் போயிடும்னு நான் கனவில்கூட நினைக்கவில்லை. இது தெரிஞ்சிருந்தா என்னிக்கோ இங்கே வந்து நான் உனக்குப் புத்தி புகட்டியிருந்திருப்பேன். உன் வயிற்றிலே பிறந்த குழந்தை கவனிப்பாரில்லாமல் தொட்டிலில் துணியைச் சுருட்டிப் போட்டாற் போலக் கிடக்கிறது. அதைக் கூடக் கவனிக்காம அந்த ஊரார் வீட்டுக் குழந்தைகளுக்கெல்லாம் உழைச்சு இப்படிப் பாடுபடுவதற்கா உன்னை நாங்கள் எவ்வளவோ செல்லமாகக் கஷ்டம் தெரியாமல் வளர்த்தோம்!' அத்தை, அத்தை'ன்னு உசிரை விட்டுடறாரே உங்க ஆத்துக்காரர்! அவருக்குக்கூட ஏன் அவளோட பக்ஷபாதபுத்தி தெரியவில்லை! நல்லபடியா நீயும் உன் குழந்தையும் நன்னா இருக்கணுமானா இவாளை விட்டு விட்டு நீ தனியாக வேறே குடித்தனம் போனாத்தான் உண்டு. ஆமாம்! சொல்லிவிட்டேன்..." என்று பல முறை சொல்லி விட்டு ஊருக்குப் புறப்பட்டுச் சென்று விட்டாள் லக்ஷ்மி.

வைதேகியின் உள்ளத்தில் நாளா வட்டத்தில் அவள் தாயார் விதைத்து விட்டுச் சென்ற விஷவித்து முளைக்க ஆரம்பித்துக் கப்பும் கிளையும் விட்டுப் பரவ ஆரம்பித்தது.

முற்றத்தில் கால்களை நீட்டியவாறு உட்கார்ந்து கொண்டு தன் பெண்ணிடம் சுவாரஸ்யமாக அளவளாவிக் கொண்டு, தன் பேரன் ராஜுவை மடிமேல் வைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தாள் காமாக்ஷி. அவளுக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு பாயில் படுத்திருந்த குழந்தை ரவியை அவள் கவனித்ததாகவே தெரியவில்லை. ஏதோ ஒரு



கணவன் :—திருடன் வந்து எதையோ தூக்கிக் கொண்டு ஓடினதுபோல் சொப்பனம் கண்டேன்! உடனே அவனைத் துரத்திப் பிடித்து, எங்கே என்னுடைய அசோகாவை யெல்லாம் எடுத்துப் போய் விட்டானோ என்று பார்த்தேன். அவனிடம் உன் அருமைப் பிடிலைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. போனால் போகிறதென்று உன் பிடிலை அவனிடமே கொடுத்து விட்டுத் திரும்பி விட்டேன்!

பெரிய விஷயத்தைச் சொல்லும் துடிப்பில் பரபரவென்று மாடியேறி வந்தாள் வைதேகி. ராஜகோபாலன் மாடி ஜன்னலருகில் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான்.

"...அதோ பாருங்கள்!...தன் சொந்தப் பேரன் பேத்திகளையும், பெண்ணையும் கொஞ்சிச் சீராட்டுவதிலே உங்கள் அத்தைக்கு அதிக அக்கறை இருக்கே தவிர நம்ம குழந்தையை அவர்கையாலே யாவது தொடுகிறாரா பார்த்தீர்களா!" என்று ராஜகோபாலனுக்கு முற்றத்தைச் சுட்டிக் காட்டிக் கூறியவாறே 'பொல' 'பொல' வென்று கண்ணீர் உகுத்தாள் வைதேகி.

தன் அத்தையிடம் எவ்வளவோ அன்பும், மதிப்பும் வைத்திருந்த ராஜகோபாலனின் உள்ளத்தையே ஒரு கணம் அந்தக் காட்சி கலங்கச் செய்தது. இருந்தாலும் சட்டென்று நிலைமையைச் சமாளித்துக் கொண்டான்.

"ஓ! அசடே! எங்க அத்தையினுடைய மனசு தங்கம்! அவளுக்கு ஒருநாளும் இந்தப் பட்சபாதமெல்லாம் கிடையவே கிடையாது! எங்க அத்தை பெண், அந்தக் குழந்தைகள் எல்லாம் என்றைக்கோ ஒரு நாள் வந்துவிட்டுப்போகிறவர்கள்! நம்ம குழந்தை இங்கேயேதானே இருக்கிறது! அபூர்வமாக அந்தக் குழந்தைகள் வந்திருக்கும் போது அவைகளைக் கொஞ்சாமல், நம்ம குழந்தையையே சதா கொஞ்சிக் கொண்டிருக்கத்தான் முடியுமா!"

"அப்படியானால் நாம் தனிக்குடித்தனம் போகணும். உங்க அத்தை பெண்களைப் போல் அபூர்வமா வந்து போனால்தான் நமக்கும் அந்த மாதிரியான கௌரவம் கிடைக்கும்........." அவள்

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடிப்பதற்குள் திடுக்கிட்டு நிமிர்ந்தான் ராஜகோபாலன்.

"என்ன சொன்னே! தனிக் குடித்தனமா! என்ன வைதேகி! நீயா இப்படிப் பேசுகிறாய்! ஆறுயிலிருந்து என்னை எவ்வளவோ அரும் பாடு பட்டு வளர்த்த என் அத்தையையும், அத்திம் பேரையும் தனியாக விட்டு விட்டா போக வேண்டும் என்கிறாய்?" என்றான் ராஜகோபாலன்.

"தனி என்ன! உங்க அத்தைக்குத் துணை உங்க அத்திம்பேராச்சு! நாமும் அவர்களை அடிக் கடி வந்து கவனித்துக் கொண்டால் போகிறது!" என்றாள் வைதேகி.

ராஜகோபாலன் பதில் பேசவில்லை.

அன்று காலை ஆபீஸில் தன்னுடைய ஆசனத் தில் உட்கார்ந்திருந்த ராஜகோபாலன் மும்முர மான ஆபீஸ் வேலையொன்றில் ஈடுபட்டிருந்தான். அவனை மானேஜர் அழைப்பதாக வந்து சொன் னான் ஆபீஸ் சேவகன்.

பரபரப்பும்,

"நீங்கள் ஒரு விஷயத்தைத் தீர்மானித்து விட்ட அப்புறம் நான் ஏன் அதற்கு எதிர்ப்பு சொல்லப் போகிறேன்! எனக்குப் பூரண சம் மதம்" என்று மலர்ந்த முகத்துடன் கூறிய அவன் "எப்போது பம்பாய்க்குப் புறப்பட வேண்டும்!" என்று கேட்டான்.

"அடுத்த வார முடிவிலே" என்றார் மானேஜர்.

அன்று மாலை வீட்டிற்கு வந்து அவன் தன் னுடைய மாற்றல் விஷயத்தைச் சொன்ன போது காமாக்ஷியும் அவள் கணவரும் இடி விழுந்தவர் போலாகி விட்டனர். இது விஷயமாகத் தேன் குடித்த நரியைப் போல் தாங்க முடியாத மகிழ்ச்சி யும், திருப்தியும் அடைந்த ஆத்மா ஒன்று இருந் தது — அதுதான் வைதேகி. அவ்வளவு எளிதில் தன்னுடைய மனோரதம் பூர்த்தியடைந்து தான் எதிர்பார்த்தது நடந்துவிடும் என்று அவள் கனவில்கூட நினைக்கவில்லை. எவ்வளவோ வருஷங் களாகத் தன் கையின் கீழ் வளர்ந்த ராஜகோபா லன் தன்னை விட்டு விட்டுக் குடும்பத்துடன் பம்பாய் போய்விடப் போகிறான். அவர்களுமில்

# க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ்—

# 2* இருவழிகளில் வேலைசெய்கிறது!



**✱ ஆக்டிவ் க்ளோரோபில்—**

வாய் துர்நாற்றத்தை நீக்கி, சாதாரண ஈறுக் கோளாறு களைத் தடுத்து, பல் சிதைவை ஒழிக்கிறது!

**✱ ஊடுருவும் நுரை—**

வாய்க்கு புதுமணம் தந்து, சமகுணமுள்ள க்ளோரோபில்லை உங்கள் பிரஷ் நுழையாத இடங்களுக்கும் எடுத்துச் செல்லுகிறது!

க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் அரை யங்குல அளவு எடுத்து பிரஷினால் பற்களைத் துலக்குங்கள். க்ஷணத்தில், அதன் நுரை வேலைசெய்வதை உணருவீர்கள் . . . சுத்தம் செய்கிறது, புதுமணம் ஊட்டுகிறது, இயற்கைப் பச்சை க்ளோரோபில்லை வாயிற்குள் ஒவ்வொரு மூலைக்கும்-பிரஷ் நுழையமுடியாத இடங்களுக்கும்கூட—எடுத்துச்செல்லுகிறது.

ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் ஊடுருவும் நுரை—இரண்டின் நற்பயனையும் அடையுங்கள்! இன்றே க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் ஒரு டியூப் வாங்குங்கள்—இரு வகை செயல் திறனுள்ள பற்பசை அது. ஒருமுறை உபயோகித்தால், எப்பொழுதும் அதைத்தான் உபயோகிக்கத் தோன்றும்!

## இரண்டு வழிகளில் சிக்கனம்கூட!



**1 சிறிதளவே போதும், பெரிதும் பயன்படும்!**

சாதாரண முறையில் பல் துலக்குவதில், க்ளோரோபில் சேர்ந்த கோலினஸ் அரை அங்குல அளவு அதைப் போல் 400 மடங்கு பெருகி, வாயின் ஒவ்வொரு மூலைக்கும் ஊடுருவிச் செல்கிறது. ஆம், அரை அங்குலமே தாராளமாகப் போதும். ஆகவே ஒரு டியூப் நெடுநாள் வரும்!




தவிர —

**2** உங்கள் பணத்திற்கு ஏற்ற மிகப்பெரிய டியூப் அது!

இந்தியாவில் தயாரிப்பவர்கள்: ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., மாகனட் ஹவுஸ், பலார்ட் எஸ்டேட், பம்பாய் 1

டிரேட் மார்க் உடைமையாளர்கள்: ஒயிட்ஹால் பார்மசல் கம்பெனி, நியூ யார்க், N. Y. யு. எஸ். ஏ.

GK. 8267

தன்னைச் சொந்தப் புதல்வன்போல் வளர்த்து விட்டுத் தனக்கு அருமையாகப் பிறந்திருக்கும் முதல் குழந்தையின் ஆண்டு நிறைவுக்குத் தன் பக்கத்து மனிதர்கள் என்ற முக்கிய ஸ்தானத்திலுள்ள அவர்கள் வராமல் தனக்குப் பெரிய தலையிறக்கத்தையும், மனக்குறையையும் உண்டாக்கி விட்டதை எண்ணி எண்ணி அவ்வளவு மகிழ்ச்சியிலும் மனம் உருகினான் ராஜகோபாலன்.

"பார்த்தீர்களா! உங்க மனிதர்கள் என்று அவர்கள் மேல் உயிரையே வைத்திருந்ததற்கு உங்க அத்தையும் அத்திம்பேரும் உங்களுக்குச் சரியான பாடம் கற்பித்து விட்டார்கள். இதே உங்க அத்தைக்குப் பெண்கள் வயிற்றில் பிறந்த சொந்தப் பேரன் பேத்திகளாக இருந்தால் இப்படி விட்டுக் கொடுப்பாரா!" என்று அன்று இரவு வைதேகி ஏசிக் காட்டியபோது ராஜகோபாலனின் கண்களில் கண்ணீர் நின்றது.

மறுநாள் காலை. 'ஸார், தந்தி!' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டு வாயிற்புறம் ஓடினான் ராஜகோபாலன். நடுங்கும் கரங்களுடன் தந்தியை வாங்கிப் பிரித்த அவன் "உன் அத்தைக்கு உடம்பு ரொம்ப அதிகமாக இருக்கிறது. உடனே புறப்பட்டு வரவும்" என்றிருந்த வரிகளைப் படித்து, 'ஆ' வென்று வாய்விட்டலறி விட்டான். உடனே வைதேகியிடம் விஷயத்தை பகிர்ந்து விட்டு அவளையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு ஆபீசுக்கும் லீவு எழுதிப் போட்டு விட்டுப் புறப்பட்டு விட்டான். 'தான் ஆடாவிட்டாலும் தன் சதை யாடும்' என்ற வாக்குப் பொய்யாகி விடுமா! பல வருஷகாலம் அவள் வீட்டுச் சோற்றைத் தின்று வளர்ந்த பாசம் விட்டுவிடுமா! வழியெல்லாம் ஏதேதோ பயங்கரக் கற்பனைகளில் மனத்தை அலட்டிக் கொண்டே வந்தான் ராஜகோபாலன். ரயில் முன்னே செல்லச் செல்லக் காமாக்ஷியின் நினைவு முகம்தான் அவன் முன் ஓடோடி வந்தது.

அவனும் வைதேகியும் வண்டியை விட்டு இறங்கியபோது வீடு நிசப்தமாக இருந்தது. உள்ளே நுழைந்தவுடன் வெறிச்சோடி யிருந்த கூடம் தாங்க முடியாத திகிலை அவன் உள்ளத்தில் பாய்ச்சியது. "வாடாப்பா, ராஜகோபால்......" என்று தழுதழுத்த குரலில் கூறியவாறே, உள்ளிருந்து வந்த ஹரிஹரய்யர் அவனை யணைத்துக் கொண்டு 'கோ'வெனக் கதறிவிட்டார்! "அத்தை எங்கே!" என்று துக்கம் நெஞ்சை யடைக்கக் கேட்ட ராஜகோபாலனுக்கு வேறு என்ன சொல்வது என்றே புரியாமல் மனம் ஸ்தம்பித்து விட்டது. "அத்தை இறந்து இன்று இரண்டு நாட்களாகி விட்டன" என்று விம்மலுக் கிடையே கூறினார் ஹரிஹரய்யர்.

"ஐயோ! எனக்கு ஏன் அதைத் தெரிவிக்கவில்லை......!" என்று அலறிய ராஜகோபாலன் விம்மி விம்மி அழ ஆரம்பித்தான். வைதேகியின் கடின நெஞ்சையே அவனுடைய அழுகை உலுக்கி அவள் கண்களில் கண்ணீரை வரவழைத்தது.

"ராஜா......" உன்னிடம் எவ்வளவோ விஷயம் சொல்ல வேண்டும். இப்படி வா......!" என்று கூடத்து அறைக்கு அவனை அழைத்துச் சென்றார் ஹரிஹரய்யர்.

ராஜகோபாலன் நடைப் பிணம் போல் நடந்து அவர் பின்னே சென்றான். அவனால் தன் காதுகளை, கண்களை எதையுமே நம்ப முடியவில்லை. "ராஜா! நீ ஊருக்குப் போனது முதலே எங்களுக்குப் பிடித்து விட்டாற் போலாகிவிட்டது. அதிலும் உங்க அத்தை பிரமை பிடித்தவள் போலாகி விட்டாள். சாப்பிட, தூங்க ஒன்றுமே தோன்றாமல் சதா சர்வ காலமும் உன்னை, வைதேகியை, குழந்தை ரவியை எல்லோரையும் நினைந்து நினைந்து ஏங்கித் தவித்த அவளை, அந்த ஏக்கமே ஒருநாள் படுக்கையில் தள்ளிவிட்டது. இரண்டு நாட்களுக்கு முன்பு ஒருநாள்—அன்று அவளுக்கு உடம்பு ரொம்ப அதிகமாகிவிட்டது. "நாளைக்குப் பரணி நக்ஷத்திரம் தானே!" என்றாள் அவள் என்னிடம் திடீரென்று. "ஆமாம்" என்று தலையை அசைத்தேன் நான். "நம்ம குழந்தை ரவிக்கு நாளைக்கு ஆண்டு நிறைவாயிற்றே!...... நாம்தான் பார்க்கக் கொடுத்து வைக்காத பாவியாகி விட்டோம்......' என்று கண்களில் கண்ணீர் பொங்க, தாபம் நிறைந்த குரலில் கூறிவிட்டு "இதோ பாருங்கள்! என் உயிர் இனி அதிக நேரம் நீடித்திருக்கப் போவதில்லை. 'இன்னும் சில மணி நேரத்தில் நான் போய்விடப் போகிறேன் தயவு செய்து உடனே இந்த விஷயத்தை நம்ப ராஜாவுக்குத் தெரிவிக்கடாதேங்கோ! நாளைக்குப் பொறுத்து [மறுநாளைக்குப் போய்ச் சேருகிறாப் பலே தந்தி கொடுங்கள், போதும். அந்தக் குழந்தை ரவிக்கு நாளைக்கு ஆண்டு நிறைவு. என்னமோ நம்ப ராஜகோபாலனும் இவ்வளவு பெரியவனாக வளர்ந்து முதல் முதலாகத் தன் குழந்தைக்கு முதல் பிறந்த நாளை—புதிதாக ஒரு ஊருக்குப் போய்—கொண்டாடறான். அன்றைக்குப் போய் அதை நிறுத்தறாப்பலே இந்த சாவு சமாசாரம் போய்ச் சேரவேண்டாம்... அவன் எவ்வளவோ ஏற்பாடெல்லாம் செய்து வைத்திருப்பான். பெரிய அபசகுனம் மாதிரி முதல் குழந்தையோட ஆண்டு நிறைவுக்கு இப்படி சேர்ந்து அது நின்று போயிடுத்தேன்னு அவனுக்கும், அந்தப் பெண் வைதேகிக்கும் பெரிய குறையாகி விடும்.

"இந்த உடம்பு இன்னிக்கு இல்லேன்னாலும் சீக்கிரத்திலே கீழே விழப்போற உடல். வயசு ஆச்சு. பட்டுப் போகும் மரம்...அந்தக் குழந்தை ரவி இப்போதான் முளைச்சு வெளிக் கிளம்பும் இளம் பிஞ்சு... அது பெரிசாகி நன்னு தீர்க்காயுசோட மார்க்கண்டனா வாழ்ந்திருக்கணும். அதனாலே உங்களைக் கடைசியா நான் கேட்கிற வேண்டுகோள் இதுதான். என்னுடைய உயிர் இன்றைக்கே போய்விட்டால் உடனே அவாளுக்குத் தந்தியடிச்சுடாதேங்கோ. எங்கே ...! சத்தியமா நான் சொன்னபடியே செய்யறேன்னு வாக்குக் கொடுங்கோ......!" என்று என் பக்கமாகத் தன் கையை நீட்டிச் சத்தியம் வாங்கிக் கொண்டாள்.

"ஊரார் கேட்டால் தந்தி சேர்ந்த சமயம் நீ ஆபீஸ் விஷயமாகப் பம்பாயை விட்டு எங்கோ போயிருந்ததாகவும், பிறகு மறு நாள் வந்து தந்தியைப் பார்த்து விட்டுப் புறப்பட்டதனாலேயே கடைசி சமயத்திற்கு வர முடியவில்லை என்று பொய்க் காரணம் கூறி விடலாம் என்று, ஊரார் வாயை மூடக் காரணம் ஒன்றையும் அவளே தயாரித்துக் கூறி விட்டாள்.

"இப்பவும் உனக்கு இந்த விஷயம் தெரிஞ்சால் பெரிய அதிர்ச்சியாக இருக்குமேன்னுதான் 'உடம்பு அதிகமா யிருக்கு'ன்னு தந்தி கொடுத்தேன்..." என்று கூறி முடித்த ஹரிஹரய்யர் கரகர வென்று கண்ணீரைப் பெருக்கினார். ராஜகோபாலனின் கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறாய்ப் பெருகிற்று. வைதேகி அழுத அழுகைதான் ரொம்ப அதிகமா யிருந்தது. நெஞ்சுணர்ந்த குற்றம் அவளைத் துடிக்க வைத்தது.

பிரதி சனி இரவு 8-30 மணிக்கு 25·5 மீட்டரிலும் ஞாயிறு இரவு 9 மணிக்கு 41·72 மீட்டரிலும் "பியர்லேன் பாரிஸ் டிபின் அல்லது குயிட்ஸ்" ஒலிபரப்பைக் ரேடியோ சிலோனில் கேளுங்கள்.




ராமநாதன் அன்று மூன்றுலேயே ஆபீசிலிருந்து வீட்டுக்கு வந்துவிட்டார். அவர் மனம் அமலாவைப் பற்றிய நினைவிலே சங்கடப்பட்டுக் [redacted]

நினைவிலே சூடு ஏறுவதற்குள் அதைப் பெருமூச்சினால் குளிரப் பண்ணினார் ராமநாதன். பிறகு வேப்ப மரத்தடியிலுள்ள சிமிட்டிப் பெஞ்சியில் [redacted]

விட்டு உட்கார்ந்து கொண்டு அதைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

காரோடு விளையாடிக் கொண்டிருந்த பையனின் பார்வை சட்டென்று காரேஜிலிருந்த அந்தப் புதிய சைக்கிள் மீது தாவிற்று.

"அடேடே!" என்று அதனருகில் ஓடினான். ஆசை முகத்திலே வழிந்தோட அதன் பளபளக்கும் கைப்பிடியைத் தொட்டு-இல்லை-தொடக் கையைத் தூக்கினான். உடனே சட்டென்று கையை இழுத்துக்கொண்டு ராமநாதனைத் திரும்பிப் பார்த்தான்.

"ஜோரான சைக்கிள், மாமா..." என்று திரும்பி வந்தான். அவர் மௌனம் அவனை மேலே பேச விடவில்லை. அவர் இமைக்காத பார்வை அவன் உள்ளத்திலே அச்சத்தை வருவித்தது. "நான் அதைத் தொடவில்லை, மாமா!" என்றான். ராமநாதன் அதற்கும் பதில் சொல்லவில்லை. பையன் ராமநாதனைப் பேச வைக்க நினைத்தானோ என்னவோ, சிறிது நேரம் சென்றதும், "மாமா! இந்த நாய்க்குட்டியின் பெயரென்ன, மாமா! நல்ல நாய்க்குட்டி!" என்றான்.

இந்தத் தடவை ராமநாதன் பேசினார். "ஜிம்மி" அவர் குரல் கனத்திருந்தது. கனைத்துக் கொண்டு, "உன் பெயர்?" என்று கேட்டார்.

பையனின் முகம் மலர்ந்து விட்டது. அவர் பேசி விட்டார்! "என் பெயர் முருகன், மாமா! எங்கள் வீடு அடுத்த தெருவிலே இருக்கிறது. பூக்காரப் பொன்னம்மாள் என்றால் எல்லாருக்கும் தெரியும்." மள மளவென்று பேசிக் கொண்டே போனான் பையன். "அந்தச் சைக்கிளை நான் தொட்டுப் பார்க்கலாமா! நிஜமாகச் சொல்கிறேன், மாமா! நான் அதை விடமாட்டேன். தொட்டு மாத்திரம் பார்க்கிறேன். உங்கள் வீட்டுப் பையன் கோபித்துக் கொள்வானா?" என்று கேட்டான்.

ராமநாதன் நெஞ்சில் சுரீர் என்று வலித்தது. முடியாது என்று சொல்ல வாயெடுத்தவர் பையனின் முகத்தில் தெரிந்து நின்ற ஆவலின் துடிப்பைக் கவனித்தார். சைக்கிள் - அதுவும் அது போன்ற சின்னச் சைக்கிள் பையன்கள் ஏறி விடுவதற்குத் தானே தவிர புழுதியைத் தாங்கிக் கொண்டு வேதனையின் சின்னமாகச் சுவரில் சாத்தி நிறுத்தி வைப்பதற்கல்லவே! அவர் மனம் இப்படி வாதம்புரியத் தொடங்கவே, அந்தப் பையனின் ஆவலை நசுக்க விரும்பாமல், "முருகா! உனக்குச் சைக்கிள் விடத் தெரியும் என்றால் கொஞ்ச தூரம் விட்டுவிட்டுத் தான் வாயேன்!" என்றார்.

அந்தப் பையன் ஆனந்தத்தால் பூரித்துப் போய் விட்டான். "நிஜமாகவா, மாமா!" என்று கேட்ட அவன் கண்கள் அகல விரிந்தன. "நிஜமாக நான் அந்தச் சைக்கிளில் ஏறிப் போகலாமா! எனக்குச் சைக்கிள் விடத் தெரியும், மாமா!" என்று கூறிய வாறே துள்ளி ஓடி அதன் அருகில் நின்றான்.

"ஒரே ஒரு ரவுண்டுதான். தெரிஞ்சுதா?" என்றார் ராமநாதன். அவன் ஆனந்தம் அவர் மனத்துக்கு இதமாக இருந்தது.

"ஒரே ஒரு ரவுண்டுக்கு மேலே நான் விடவே மாட்டேன்" என்று மிகுந்த பயபக்தியுடன் சைக்கிளை உருட்டி வந்து அதன்மீது தாவி ஏறி உட்கார்ந்தான். அவனுக்குப் பெருமை தாங்கவில்லை.

இரண்டடி நகர்ந்திருக்க மாட்டான். வீட்டின் கதவு திறந்தது. பரபரப்புடன் ஒரு அம்மாள் ஓடி வந்தாள். ஆத்திரத்தினால் அவள் முகம் பளபளத்தது. கோபத்தினால்திறந்திருந்த அவளுடைய வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரவில்லை. அவனைத் தாண்டி நகர்ந்த சைக்கிளின் கைப்பிடியைப் பிடித்து நிறுத்திக் குலுக்கினாள். பையன் சைக்கிளிலிருந்து பொத்தென்று கீழே விழுந்து உருண்டான். எழுந்து திரும்பி அவள் முகத்தை—ஆத்திரத்தால் சிவந்த அந்தப் பயங்கரமான முகத்தை—பார்த்ததும் நடுங்கியபடி திரும்பிப் பார்க்காமல் ஓடினான். நாய்க்குட்டியும் வீதிவரை அவனோடு ஓடி அதற்குமேல் போகத் தனக்கு அனுமதி இல்லை என்பதை உணர்ந்ததுபோல அவன் போவதையே பார்த்துக் கொண்டு நின்றது.

ராமநாதன் மௌனமாக அவள் அருகில் வந்தார்.

"எப்படி....எப்படி" அவள் விம்மலோடு பேசினாள். "இதை எப்படி இன்னொரு குழந்தைக்குக் கொடுத்தீர்கள்! இது என் மணியின் சைக்கிள். இதை இன்னொரு குழந்தை தொட எப்படிச் சம்மதித்தீர்கள்!" வார்த்தைகள் குழறிக் குழற உள்ளே ஓடினாள் அவள். ராமநாதன் சைக்கிளைப் பழையபடி அதே இடத்தில் கொண்டு போய்ச் சாத்தி விட்டு நெற்றியிலே வடிந்து நின்ற வியர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே காரின்மீது சாய்ந்து நின்று கொண்டார். நாய்க்குட்டி உடலைச் சிலிர்த்து அவர் காலைச் சுற்றிச் சுற்றி வந்தது. அதை மறுபடி கயிற்றோடு இணைத்து விட்டு வீட்டுக்குள் நுழைந்தார். பரிதாபமாக ஒலித்த அதன் குரல் அவர் காதுகளில் வரவரத் தேய்ந்து மங்கி மடிந்தது.



உள்ளே நுழைந்த ராமநாதனைச் சூனியமான ஹால்தான் பார்த்துப் பெருமூச்சு விட்டது. அவள் இல்லை. மேஜை மீது வைத்திருந்த டிபனும் காப்பியும் ஆறிக் கிடந்தன. அவள் எங்கே இருப்பாள் என்று அவருக்குத் தெரியும். மாடியிலே, அவனை இப்படி ஆக்கி வைத்த அவன் அறையில் தான் இருப்பாள். மௌனமாக அவர் கால்கள் மாடிப் படிகளில் ஏறின. அவள் ஜன்னல் வழியே

வெற்று வெளியை நீர் திரையிட்ட கண்களுடன் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

அந்த அறை முழுவதும் குழந்தைகளின் விளையாட்டுச் சாமான்கள் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. சின்னக் கட்டிலும் மெத்தையும் யாரோ படுத்துப் புரளுவதற்குத் தயாராக விரித்து வைக்கப்பட்டிருந்தன. அந்த அறையில் இருந்த எல்லாமே குறுகுறுப்பும் விஷமமும் நிறைந்த ஒரு பையனுக்குத் தேவையானவைகளாக இருந்தன. தங்களைத் தாறுமாறாகத் தூக்கி எறிந்து விளையாடி ஆர்ப்பாட்டம் செய்யும் சின்னக் கைகளுக்காக எல்லாமே காத்துக் கிடந்தன.

ராமநாதன் தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "அலோ, இந்தச் சாமான்களை எல்லாம் ஏதாவது ஒரு அநாதைக் குழந்தைகள் விடுதிக்கு அனுப்பி விடலாம். இவை இந்த வீட்டில் இருக்க வேண்டாம். உலகத்தில் இதை எல்லாம் அனுபவிக்க எவ்வளவோ குழந்தைகள் இருக்கின்றன!" என்றார்.

"ஆமாம், உலகத்தில் எவ்வளவோ குழந்தைகள் இருக்கின்றன. அவை எல்லாம் என் குழந்தையாகிவிடுமா! அவைகள் என்னை வந்து அம்மா என்று கட்டிக் கொள்ளுமா!"—அவள் கண்களில் நீர் வழிந்து உதிர்ந்து கொண்டிருந்தது.

கசந்து விட்ட அவள் உள்ளத்திலே தன் போதனைகள் ஒட்டாது என்று மௌனமாகக் கீழே இறங்கி விட்டார் ராமநாதன்.

இந்த நிலை மாற வேண்டும். அவளுடைய இந்த விபரீதப் போக்கை மாற்றியாக வேண்டும். மாற்றினால்தான் தம்மால் அவளுடன் இந்த வீட்டில் வாழ முடியும் என்று அவருக்குத் தோன்றிற்று.

எனவே, மனோ தத்துவ நிபுணர் ஏகாம்பரத்தைப் பார்க்கச் சென்றார் அவர். ராமநாதனை வரவேற்று உட்காரச் சொல்லித் தம்மிடம் வந்த காரியத்தைச் சொல்லும்படி கேட்டபோது அவர், "டாக்டர், என் மனைவியின் விஷயமாக உங்களிடம் யோசனை கேட்க வந்தேன்!" என்றார் மென்று விழுங்கிக் கொண்டே.

"அவர்கள் எங்கே! உள்ளே அழைத்து வாருங்கள்!" என்றார் டாக்டர்.

"அவள் வரவில்லை. அவள் யாரையும் பார்க்க விரும்புவதில்லை. அவள் விரும்புவதெல்லாம் தனிமைதான்."

"உங்களை வாட்டுவதெல்லாம் கவலை தானாக்கும்!" என்ற டாக்டர் சிரித்தார். பிறகு, "விவரமாகச் சொல்லுங்கள்" என்று சொல்லிக்கொண்டே நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்தார்.

"டாக்டர்! எனக்கு அடுத்த சித்திரைக்கு ஐம்பது வயதாகப் போகிறது. என் மனைவி என்னைவிட ஐந்து வயதுதான் சிறியவள். எங்கள் குடும்ப வாழ்க்கை முப்பது வருஷமாக நடந்து வருகிறது. பிரமாதமாகச் சொல்லும்படியாக இல்லாவிட்டாலும் நாங்கள் வாழ்க்கையை ரசித்து வாழ்ந்து வந்தோம். எங்களுக்கு இருந்த ஒரே குறை குழந்தை இல்லையே என்பதுதான்."—தம் வாழ்க்கைச் சரித்திரத்தையே விவரமாகச் சொல்ல ஆரம்பித்து விட்டார் ராமநாதன்.

"குறைப்பட வேண்டிய விஷயந்தானே!" என்றார் டாக்டர்.

"அந்தக் கவலை எங்கள் இருவரின் நெஞ்சத்தையும் அரித்துக் கொண்டிருந்தது. ஆனால் இதைப் பற்றி நாங்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்வதில்லை. அவளுடைய நாற்பதாவது பிறந்த தினத்தன்றுதான் அவள் என்னிடம் அதைச் சொன்னாள்" என்றார் ராமநாதன்.

"எதை! குழந்தை இல்லையே என்ற ஏக்கத்தையா!" என்றார் டாக்டர்.

"இல்லை, டாக்டர்! என் கல்யாணத்தன்று அவள் முகத்தில் படர்ந்த நாணத்தின் சிவப்பை மறுபடி அன்றுதான் அவள் முகத்தில் பார்த்தேன். தான் தாயாகப் போவதை அவள் என் காதில் வந்து ரகசியமாகச் சொன்னாள். அந்த வீட்டில் எங்களிருவரைத் தவிர வேறு யாருமே இல்லை, டாக்டர். இருந்தாலும் அவள் இந்த விஷயத்தை ஏனோ என் காதில் ரகசியமாகத்தான் சொன்னாள். இதோ பாருங்கள் டாக்டர்...இவன்தான் எங்கள் வாழ்வை மலர்விக்கப் பிறந்தவன்" என்று சொல்லித் தம் பர்ஸிலே வைத்திருந்த ஒரு போட்டோவை எடுத்து டாக்டரிடம் நீட்டினார். அது அழகான ஒரு பையனின் படம். அவனுக்கு எட்டுவயதுதான் இருக்கும். சிரித்த முகமும், குறுகுறுத்த பார்வையுமாக நின்று கொண்டிருந்தான். டாக்டர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ராமநாதன் சொன்னார். "அவன்தான் மணி. அவன் சிரிப்பும் பேச்சும் விளையாட்டும் விஷமமும் எங்களை இந்த உலகத்தில் பாக்யசாலிகள் என்று கர்வப்படும்படி செய்துவிட்டன." அவர் தம் குழந்தையைப் பற்றிப் பெருமையுடன் சொல்லிக் கொண்டு போனார். தன் தாயாரின் உள்ளத்திலே அவன் எத்தனை பெரிய பாசத்தை வளர்த்து விட்டான் என்பதை விவரித்தார். அவன் செய்த, சகிக்க முடியாத விஷமங்களும் தங்களுக்கு இன்பமாக இருந்தன வென்பதைச் சொன்னார். தம் மனைவி அவனிடம் உயிரையே வைத்திருந்ததாகச் சொன்னார்.

"அந்த ஒரு சம்பவம்தான் டாக்டர் அவளை இன்றைக்கு இப்படிப் பித்துப் பிடித்தவளாக்கி விட்டது. என் மனைவியின் பிறந்தநினத்தன்று அவள் வெகு நாளாகக் கேட்டிருந்த பச்சைக் கல் மோதிரத்தை வாங்கி வந்திருந்தேன். அப்போது மணிக்கு ஆறு வயதுதான். நான்





"கல்யாணத்தில் நம் பையனுக்கு ரூபாய் எட்டாயிரம் கொடுப்பதற்கு ஒப்புக் கொண் டது இருக்கட்டும். சீ, என்ன செய்கிற தாகச் சொன்னார்?"

"சீ என்றேன், அவ்வளவுதான். ஒரேயடியாக என்மேல் சீறி விட்டார்."

---

அவன் தாயாருக்குப் பரிசு தருவதைப் பார்த்து விட்டு அவன் வெளியே ஓடினான். திரும்பி வந்தபோது அவன் இரண்டு கைகளிலும் ரோஜா மலர்கள் குலுங்கிக் கொண்டிருந்தன. அந்தப் பூவை என் மனைவியின் முன்னால் நீட்டிக் கொண்டே, 'அம்மா, இது உன் பிறந்த தினத்துக்கு என் பரிசு!' என்றான் பெரிய மனிதனைப் போல. அதைக் கேட்ட எங்கள் உள்ளத்திலே மகிழ்ச்சி பொங்கி வழிந்தது.

"அகிலா தன் குழந்தையை வாரி அணைத்துக் கொண்டாள். 'உங்க அப்பா பரிசைவிட உன் பரிசுதாண்டா உயர்ந்தது' என்று அவன் உச்சியைத் தன் கண்ணீரால் நனைத்தாள்" என்றார் ராமநாதன்.

"அதிசயம்தான், சார்! அந்தக் குழந்தைக்குப் பூ வாங்கித் தன் தாயாருக்குக் கொடுக்க வேண்டுமென்று தோன்றியது தெய்வச் செயல்தான்!" என்று வியப்புடன் சொன்னார் டாக்டர்.

"'ஒரு பெண்ணுக்கு மஞ்சளும் பூவுந்தான் பெரிய நகை. தங்கமும் வைரமும் பெருமைக்குத்தான்' என்று என் மனைவி என்றோ ஒரு நாள் அடுத்த வீட்டு அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்ததை மணி கேட்டிருக்கிறான். முதல் நாள் மிட்டாய் வாங்கித் தின்பதற்குக் கொடுத்திருந்த ஓரணாவுக்கும் பூ வாங்கி வந்து தன் தாயாருக்குப் பரிசளித்து விட்டான். இந்தச் சம்பவம் அவள் மனத்தை உருக்கிவிட்டது. மணி அவன் வயதுக்கு அதிகமான புத்திசாலித் தனத்தோடு இருந்தான். பார்த்தவர் வியக்கும்படி பேசினான். மணி தன் மகன் என்ற பெருமையால் என் மனைவி இறுமாந்து போயிருந்தாள். நானும் கூடத்தான்..." அவர் கண்களில் நீர் வந்து முட்டிற்று. உதட்டைக் கடித்துக் குமுறி வரும் அழுகையைச் சமாளிக்கப் பார்த்தார்.

டாக்டருக்கும் வேதனையாக இருந்தது. "இப்போது மணி...!" என்று சந்தேகத்துடன் வார்த்தையை முடிக்காமல் விழுங்கினார்.

"எங்கள் உள்ளத்தில் தான் இருக்கிறான். இந்த உலகத்தில் இல்லை" என்ற போது அவரால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. டாக்டரும் "என்ன!" என்று கத்தி விட்டார். அவ்வளவு புத்திசாலியான பையனை இழந்த துக்கம் எப்படிப் பட்டது என்பதை அவர் உணர்ந்து கொண்டார்.

"சென்ற வருஷம் ஊரிலே விளையாடிய மகமாயி அவனைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு விட்டாள், டாக்டர்!"—ராமநாதன் குமுறி வரும் அழுகையோடு வார்த்தைகளைக் கலந்து கொட்டினார். "அவனுக்கு நினைவு தப்புவதற்கு முன்னால் சைக்கிள் வேண்டும் என்றான். ஓடோடிப் போய் ஒரு சைக்கிள் வாங்கிக் கொண்டு வந்தேன். அதைக் கண்ணால் பார்க்கக்கூட அவன் இருக்கவில்லை, டாக்டர்!"—கைக் குட்டையால் வாயை அழுத்திக்கொண்டு அரற்றினார் ராமநாதன்.

டாக்டரும் தன் கசிவைத் துடைக்க வேறு பக்கம் திரும்பிக் கொண்டார். கொஞ்ச நேரம் அங்கே பேச்சில்லை. மெள்ள மெள்ள ராமநாதன் தம்மைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தார். அவரைப் பேச விடும் அளவுக்கு அழுகை அடங்கியதும், "என் மனைவி அவன் இறந்தான் என்றதும் அழவே இல்லை, டாக்டர்! அப்படியே சிலையாக உட்கார்ந்து விட்டாள். அவள் நெஞ்சு உடைந்து விட்டது. அவள் அழாமல் இப்படித் துக்கத்தைத் தேக்கிக் கொண்டிருப்பது நல்லதுதானா, டாக்டர்!" என்று கேட்டார்.

டாக்டர் பதில் சொல்லவில்லை. மௌனமாக இருந்தார். ஆனால் ராமநாதன் மௌனம் சாதிக்கவில்லை. "டாக்டர்! நாங்கள் அந்நியர்களைப் போல அந்தச் சூனியமான வீட்டில் சூனியமான வாழ்க்கை நடத்துகிறோம். என் மனைவி அகிலா, அவனுக்காகக் காத்துக் கிடக்கிறாள், இனி அவன் வரமாட்டான் என்ற எண்ணமின்றி. டாக்டர், அவள் உடைந்த பொம்மை யாகிவிட்டாள். ஆனால் அழவில்லை" என்று கூறி ராமநாதன் அழுதார்.

"இது துக்கம் மட்டுமல்ல. இதில் ஏமாற்றமும் கலந்திருக்கிறது. துக்கம் மட்டுமானால் மனிதனால் தாங்கிவிட முடியும். ஏமாற்றம் அதோடு கலந்தால் அழிவுதான்" என்றார் டாக்டர்.

"அவள் அழிந்து கொண்டுதானிருக்கிறாள் டாக்டர்! நான் என்ன செய்ய!"—பரிதாபமாகக் கேட்டார் ராமநாதன்.

"ஏன்! நீங்கள் ஏதாவது ஒரு குழந்தையைச் சுவீகாரம் எடுத்து வளர்க்கலாமே! அதைப்பற்றி நினைத்ததுண்டா!"

"இல்லை, டாக்டர்! அவள் அதற்குச் சம்மதிக்கவில்லை. 'என் ரத்தமும் சதையுமாகுமா அது!' என்று கேட்கிறாள் அவள்."

"அப்படியானால் அந்த வீட்டை விட்டு வேறு இடத்துக்குப் போய் விடுவதுதான்நல்லது. அந்த வீட்டின் ஒவ்வொரு மூலையும் அவன் நினைவை அதிகமாக்கிக் காட்டும். உங்கள் மனைவி அவன் நினைவை மறக்க வேண்டும்" என்றார் டாக்டர்.

"முடியவில்லை, டாக்டர். நானும் எவ்வளவோ சொல்லி விட்டேன். தன் உயிர் உள்ள வரை அந்த வீட்டை விட்டு நகர முடியாதென்கிறாள்."

"குழந்தையின் சாமான்களை எல்லாம் அந்த வீட்டிலிருந்து அகற்றி விடுங்கள். அவள் அவைகளைப் பார்க்கக் கூடாது" என்றார் டாக்டர்.

ருசித்து

அனுபவிப்பது

# பிரிட்டானியா

பிஸ்கோத்துகள்








# ஆரோக்கியமான வெண்மையான பற்களுக்கு

**COLGATE**
RIBBON DENTAL CREAM

ஒளிவீசும் புன்னகைகள் கோல்கேட் புன்னகைகள்

# கொடிய இருமல்



'பெப்ஸ் அருந்துங்கள்' என்று டாக்டர் சொல்லுகிறார்



இருமல், ஜலதோஷம், தொண்டைப்புண், சளி, இன்புளுயென்ஸா, மற்றும் தொண்டை, மார்பு, சம்பந்தமான நோய்கள் வளரும்படி விட்டுவைக்காதீர்கள் அவை உங்கள் இருதயத்திற்கும் சுவாசகோசங்களுக்கும் அபாயகரமான தொல்லையைக்கொடுக்கின்றன. பெப்ஸ் உபயோகித்து உடனே குணம் பெற முயலுங்கள். நீங்கள் பெப்ஸைச்சாப்பிடும்போது நோய்தீர்க்கும் மருந்துச்சத்துள்ள ஆவிகள் உங்கள் மார்புக்குள்ளும், சுவாச கோசங்களுக்கும் போய்ச்சேருகின்றன. பெப்ஸ் இருமலை நிறுத்தி, புண்ணைக்குணமாக்கி, எரிச்சலைத்தணியவைக்கிறது. அபாயமளிக்கும் விஷக் கிருமிகளை அழித்துவருகிறது. டாக்டர்கள் பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள். இன்கவலையளிக்கும் தொண்டை, மார்பு மாத்திரை அது.

பெப்ஸ் நன்கு அருந்துங்கள்.

**PEPS**



தொண்டை, மார்பு வலி, நிவாரண மாத்திரைகள்

மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பார்க் டவுன்

"எப்படி டாக்டர்! நான் அவனிடமிருந்து அவைகளைப் பலவந்தமாகப் பிடுங்குவதா! அவன் தான் அவைகளை வரிசைப்படுத்தி அழகுபார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறானே!"

"இந்த நிலையில் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். அவனை மனோ வியாதிகளைத் தீர்க்கும் சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விட வேண்டியதுதான்" என்றார் டாக்டர். ராமநாதனுக்கு முகம் வெளுத்து விட்டது. "பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கா!" என்று பதறினார். ஆனால் டாக்டர் அவரைச் சமாதானப் படுத்தி அவர் நினைக்கிறபடி அது அப்படிப் பயங்கரமான இடமல்ல என்றார்.

குழம்பிய மனத்துடன் வீட்டுக்குத் திரும்பி வந்த ராமநாதனை வாசல்படியில் ரௌத்திராகாரமாக அகிலா நின்று வரவேற்றாள். "பார்த்தீர்களா! நம் ஜிம்மியைக் காணவில்லை" என்றாள் படபடப்புடன்.

ராமநாதன் நாய்க்குட்டி கட்டி இருந்த இடத்துக்குப் போய் அந்த இடத்தைச் சோதித்தார். பிறகு அகிலாவின் அருகில் வந்து, "ஏன் அகிலா இப்படி ஆத்திரப்படுகிறாய்! நம் ஜிம்மியை யாரும் திருடிக் கொண்டு போகவில்லை. இதோ பார்! அதுவாகத்தான் கயிற்றைக் கடித்து அறுத்துக் கொண்டு ஓடியிருக்கிறது" என்று மைந்த கயிற்றைக் காட்டினார்.

"ஏன் அது இப்படிக் கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடணும்! இத்தனை நாள் அது இப்படிச் செய்ததில்லையே!"

"அகிலா, யோசனை செய்து பார்!" ராமநாதன் அவளைச் சமாதானப்படுத்தி அவள் படபடப்பைத் தணிக்க முயன்றார். "அதுவும் உயிருள்ள ஜீவன் தானே! அதோடு விளையாட மணி இருந்தான். அது சந்தோஷமாக இருந்தது. இப்போது அதைக் கவனிக்கிறவர்கள் இல்லை. அதோடு விளையாட ஆள் இல்லை. நீயோ என்னைக் கூட மறந்து விட்டுச் சதா சூன்யத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். தன்னைக் கவனிக்காத, தன்னிடம் அன்பு காட்டாத இடத்தில் அது எத்தனை நாளைக்குத்தான் இருக்கும்! அதற்குத் தனிமை வேதனையாக இருக்காதா! அதனால்தான் அது கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடிப்போயிருக்கிறது. என்னால்தான் உன்னைவிட்டுப் போக முடியவில்லை." இதைக் கூறியதும் வெறுப்புடன் வேறு பக்கம் திரும்பிக் கொண்டார் ராமநாதன்.

"நீங்கள் என்ன சொன்னாலும் என்னால் நம்ப முடியவில்லை. என் மணியின் நாயை அந்தத் திருட்டுப் பயல்தான் கொண்டுபோயிருக்கிறான்" என்றாள் பிடிவாதமாக அகிலா. அதற்குமேல் ராமநாதனால் பொறுக்க முடியவில்லை. ஆத்திரம் பொங்கிவிட்டது. "அகிலா! வர வர உன் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. அப்படியே இருந்தாலும் அந்தப் பையன் வீட்டுக்கு இது வாகத்தான் ஓடிப்போயிருக்கும். அவன் நல்ல பையன். அதைத் திருப்பிக் கொண்டு வந்து விடுவான். இல்லாவிட்டால் பிறகு நான் போய் அவனைப் பார்க்கிறேன். அவன் வீடு கூட அடுத்த தெருவில்தான். நீ போ, உள்ளே!" என்றார்.

"அந்தத் திருட்டுப் பயல் கொண்டுவர மாட்டான். வேண்டுமென்றே அவிழ்த்துக் கொண்டு போனவன் எப்படிக் கொண்டுவந்து கொடுப்பான்! நானே போய் அவன் காதைத் திருகி இழுத்து வருகிறேன்." இப்படிக் கூறிவிட்டுப் படி இறங்கிய அகிலாவைப் பிடித்து நிறுத்தினார் ராமநாதன்.



மனைவி :— பாவம். கோடி வீட்டு அலமு ஏதாவது பக்ஷணம் செய்து தினமும் அவள் வீட்டுப் பாத்திரத்தில் நமக்குக் கொண்டு வந்து கொடுத்துப் போகிறாள். நாம் அவளுக்குத் திருப்பி என்ன கொடுப்பது?

கணவன் :— அவள் பாத்திரத்தைத் திருப்பிக் கொடு. அதுவே போதும்.

---

"அகிலா...!"...கத்தினார் அவர். "நீ போகமாட்டாய் உள்ளே! போ, நானே போய்ப் பார்த்து வருகிறேன்" என்று கர்ஜித்து அவளை விழித்துப் பார்த்தார். பிறகு வீட்டுக்குள் நுழையாமல் அப்படியே திரும்பி வெளியே போனார். அவர் மனத்தில் ஆத்திரம், வேதனை, பரிதாபம், வருத்தம் எல்லாமாகக் குழம்பிக் கொண்டிருந்தன. முருகன் வீட்டில் போய் விசாரித்ததில் அவர் நினைத்தபடியே ஒரு நாய்க்குட்டி கழுத்தில் அறுந்த கயிற்றுடன் ஓடிவந்ததாயும் அதை அழைத்துக் கொண்டு முருகன் எங்கேயோ போனதாயும் அவன் தாயார் சொன்னாள். தம் வீட்டுக்குக் கொண்டு விடத்தான் அவன் வந்திருப்பான் என்று அவருக்குத் தெரியும். இருந்தாலும் அவன் வந்தால் நாயை வீட்டில் கொண்டுவந்து விடும்படி அவன் தாயாரிடமும் சொல்லிவிட்டுத் திரும்பினார்.

சோர்ந்த உள்ளத்துடன் தொய்ந்த நடையுடன் திரும்பி வந்து கொண்டிருந்த அவரை அந்த அலறல் தூக்கிவாரிப் போட்டது. அவர் வீட்டு வாசலில் நிற்கும் முருகனை அகிலா வெறிகொண்டவள்போல அடித்துக் கொண்டிருந்தாள். அருகில் நாய்க்குட்டி குரைத்துக் கொண்டிருந்தது.

"ஐயோ அம்மா! நான் திருடிக் கொண்டு போகவில்லை. என்னை அடிக்காதீங்க, அம்மா. ஐயோ அம்மா! அதுவாகத்தானுங்க எங்கள் வீட்டுக்கு ஓடியாந்துச்சு"—அடி தாங்காமல் உடல் நெளியத் துடித்துக் கதறினான் பையன்.

"வருமடா, வரும். திருட்டுப் பயலே! போடா! இனிமேல் இந்தப் பக்கம் வந்தாயானால்..."

ராமநாதன் ஓடினார். "அகிலா...அடி ராட்சசி! விடு, அவனை அடிக்காதே!" என்று பையனை அவள் பிடியிலிருந்து விலக்கி விட்டார்.

"மாமா...மாமா உங்கள் ஜிம்மி என்னைத்தேடிக் கொண்டு எங்கள் வீட்டுக்கு அதுவாகத்தான் ஓடி வந்தது. அதைப் போ என்று விரட்டினேன்.

போகமாட்டேன் என்றது. அதனாலே நானே அதைக் கொண்டு வந்து விடலாம் என்று வந்தேன்" என்று விக்கி விக்கித் தேம்பினான் முருகன்.

"முருகா, நீ ஓடிப்போயிடு. காலைக்கு வா. இவனுக்கு மூளை சரியாயில்லே" என்று சொல்லி அவனை அனுப்பினார். நடுங்கிப் போய் ஒண்டிக் கொண்டிருந்த ஜிம்மி முருகனுடன் ஓடப் பார்த்த போது ராமநாதன் அதைத் தூக்கிக் கொண்டார். அவருக்குத் தம் மனைவியின்மீது ஆத்திரம் பொங்கிற்று. "நீ ஒரு மனுஷிதானா! உன் குழந்தை போய் விட்டதென்று உருகிச் சாகிறாயே! முருகனும் குழந்தை தானே! அவனை அப்படியா அடிக்கிறது!" என்று முகம் சிவக்கக் கத்தினார் ராமநாதன்.

"என் மணியின் நாய் ஜிம்மி..." என்று ஏதோ சொல்ல முடியாமல் குமுறினாள் அலிலா.

"உன் மணி! அவன் எனக்கும்தான் பிள்ளை. அவன் போனதில் எனக்கு மட்டும் துக்கமில்லையா! வேதனை இல்லையா! ஆனால் உன்னைப் போலவா! சீச்சீ...இனி என்னால் உன் பிடிவாதத்தையும் வெறுப்பையும் சகிக்க முடியாது. என் நிம்மதி அழிந்து விட்டது. முப்பது வருஷங்களாக உன்னை என் உயிராக நேசித்து வந்தேன். நீ இவ்வளவு கொடியவளென்று எனக்குத் தெரியவில்லை. இந்த மாதிரி உன்ன உன்னோடு என்னால் வாழவே முடியாது. போ! என்முன்னால் நிற்காதே, சிலைபோல! போ!"—எத்தனையோ நாளாக அணை போட்டுத் தேக்கி இருந்த அவர் ஆத்திரம் கரை உடைத்துக் கொண்டு விட்டது. மறுநாள் டாக்டர் சொன்னதுபோல அவளை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விடுவது என்ற முடிவுக்கு வந்த பிறகுதான் அவர் கொதிப்பு அடங்கிற்று.

நிசப்தமான அந்த வீட்டில் விளக்கை ஏற்றி விட்டுப் பத்திரிகை படிக்க உட்கார்ந்தார். ஆனால் அவர் மனம் அதில் லயிக்கவில்லை. முப்பது வருஷ வாழ்வில் அவளிடம் அவர் அப்படிப் பேசியதே இல்லை; கடிந்து கொண்டதே யில்லை. அன்றைக்கு அவருக்கு அவள் மீது ஏனோ அப்படி ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது; கத்தி விட்டார். ஆத்திரம் அடங்கியதும் அவர் உள்ளத்திலே பச்சாத்தாப உணர்ச்சி மேலிட்டது. அவர் நெஞ்சைப் பாசமும் வேதனையும் பிசைந்து எடுத்தன.




"நேத்தைய தினம் உஷ்ணம் 107 டிக்கியாம். ஏறிண்டே வந்தது! இன்னும் ஏறி இருக்கும். ஆனால் அதற்குள் சாயங்காலம் வந்துவிட்டது. அதனாலே ஏற முடியல்லே!"

அலிலாவும் நிம்மதி இன்றி அறையில் உலாவிக் கொண்டிருந்தாள். தன் கணவன் இப்படித் தன்னிடம் வெறுப்புடன் கத்தியதே இல்லை. அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அப்போது...!

இரட்டி ஒரு மணி நேரமிருக்கும். அவர் வீட்டின் கதவை யாரோ தட்டினார்கள். ராமநாதன் இருந்த நிலையில் அவரால் எழுந்திருக்க முடியவில்லை. அலிலாதான்போய்க் கதவைத் திறந்தாள். அங்கு அவள் கண்ட காட்சி! அலிலா, திறந்த வாயுடனும் மலர்ந்த விழிகளுடனும் கை நிறைய ரோஜாப் புஷ்பத்துடன் நின்று கொண்டிருக்கும் முருகனையே பார்த்துக் கொண்டு நின்றாள். கதவு திறந்த பிறகு பேச்சுக் குரல் கேட்காமற் போகவே ராமநாதனும் வாசலுக்கு வந்தார். அங்கே அவர் கண்ட காட்சி!

"இதை என்னிடம் கொடுக்கும்படி உனக்கு யாருடா சொன்னது!" என்று அலிலா கத்தினாள்.

முருகனுக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. திக்கித் திக்கி மெதுவாக, "இதை நானாகத்தானம்மா கொண்டு வந்தேன். உங்களுக்கு ரோஜாப் பூன்னா உசிருன்னு ஐயா சொன்னாரு!" என்றான்.

ராமநாதன் பயந்தார், இந்த மலர்கள் அவள் நினைவிலே எந்த வெறியை உண்டாக்குமோ என்று! ஆனால் அலிலா 'கோ' என்று கதறிக் கொண்டு மண்டி விட்டு அந்த ஏழைப் பையன் முருகனை—சற்று நேரத்துக்கு முன்பு அடித்து விரட்டிய அந்த முருகனை — மார்போடணைத்துக் கொண்டாள். நெஞ்சு துடிக்க விம்மிக் குமுறினாள். அவள் கன்னத்தில் ஓடிக் கொண்டிருந்த கண்ணீர் முருகனைப் பயந்து ஓடச் செய்யாத கண்ணீர்!

ராமநாதனால் தம் கண்களையே நம்ப முடியவில்லை. நிற்கத் தெம்பில்லாமல் கால்கள் துவண்டன. அப்படியே சுவரில் சாய்ந்து சமாளித்துக் கொண்டார். அவர் உடலிலிருந்த ரத்தமெல்லாம் உறைந்து விட்டது போலிருந்தது. தம் அலிலாவை இனி ஆஸ்பத்திரிக்கு அனுப்ப வேண்டியதில்லை என்று அவர் மனம் சொல்லிற்று.

இந்தக் காட்சியை எல்லாம் தோட்டத்தின் இருட்டு மூலையிலிருந்து ஒரு உருவம் கவனித்துக் கொண்டிருந்தது. அது வேறு யாருமில்லை. டாக்டர் ஏகாம்பரமேதான். அவருடைய ஏற்பாட்டின்படிதான் முருகன் புஷ்பங்களுடன் அலிலாவின் முன் தோன்றினான்.

ராமநாதன் அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு போன பிறகு அவர் சிந்தனையில் அலிலாவின் நினைவு குடைய ஆரம்பித்தது. நோயாளியையே நேரில் பார்த்தால் நல்லது என்று ராமநாதன் வீட்டுக்குக் கிளம்பி வந்து கொண்டிருந்தார். அப்போதுதான் முருகன் அடிபட்டுக் கொண்டு வெளியே ஓடி வந்து கொண்டிருந்தான். உடனே டாக்டர் அவனை அழைத்து விசாரித்து விவரம் தெரிந்து கொண்டார். ராமநாதன் தம் மகன் மணியைப் பற்றிச் சொன்ன ஒரு சம்பவத்திலிருந்து இந்த ஏற்பாட்டைச் செய்து பார்க்க முடிவு செய்தார். அவர் முயற்சி பலனளித்து விட்டது. இனி அலிலா குழந்தைகளிடம் கோபப் படமாட்டாள். குழந்தைகளை வெறுக்க மாட்டாள். மணியை நினைத்து வேதனைப்பட்டு வெந்து போக மாட்டாள்.

முருகனை அலிலா உள்ளே வாஞ்சையோடு அழைத்துக் கொண்டு போவதையும் நாய்க்குட்டி ஜிம்மியின் வரவேற்புச் சத்தத்தையும் கேட்டு விட்டு மெள்ள அங்கிருந்து நழுவினார் டாக்டர்.




ஸ்டாக்கிஸ்டுகள் : மெஸர்ஸ் கே. எல். என். & கம்பெனி, சிங்காரத்தோப்பு, திருச்சிராப்பள்ளி

---

தென்னிந்தியாவின் தலைசிறந்த

# டி.எஸ்.ஆர்

தயாரிப்புகள்

DASANGAM

T.S.R.&Co.

KUMBAKONAM

BATHING POWDER

FLOWER DUST

தசாங்கம்,
பரிமள
ஸ்நானப்பொடி
புஷ்பத்தூள்
அரகஜா

டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம்

ஏஜண்டுகள் : காந்தி ஏஜன்ஸீஸ், 37, ஜானி ஜான்கான் ரோடு, ராயப்பேட்டை, மதராஸ். B. பாலபட்டாபி செட்டியார் (1938-ல் ஸ்தாபிக்கப்பட்டது), கோயமுத்தூர். சர்வபா ஸ்டோர்ஸ், மாதுங்கா (G. I. P.)

---

3 வாசனைக் கலாரத்னங்கள்

# கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர்

அகர்பத்திகள்

டி. எல். சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2




எம். கே. சங்கரன்

"தபால்!" என்ற குரல் கேட்டு ஆவலுடன் ஓடி வந்து கடிதத்தை வாங்கினாள் ராஜம். "யாரிடமிருந்து வந்திருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே அந்தப் பக்கம் வந்தாள் அவள் அத்தை கனகம்.

"எவளோ எழுதியிருக்கிறாள்!" என்று அலட்சியத்துடன் கூறிக் கொண்டே கடிதத்தைக் கனகத்திடம் கொடுத்தாள் ராஜம். கடிதத்தின் மேல் அனுப்பியவரின் விலாசத்தைக் கண்டதும் ஒரு கணம் ஸ்தம்பித்து விட்டாள் கனகம். கடிதத்தை அனுப்பியது ராஜத்தின் அம்மா லக்ஷ்மிதான்.

"இதென்ன ராஜம்! இப்படிச் சொல்கிறாய்? அவள் உன் அம்மா இல்லையா?" என்றாள் கனகம்.

"அம்மாவா அவள்?" — ராஜம் பல்லைக் கடித்தாள்.

"அப்படியெல்லாம் சொல்லக் கூடாதம்மா! என்ன இருந்தாலும் அவள் உன்னைப் பெற்றவளில்லையா?" என்று கூறிக் கொண்டே கடிதத்தைப் பிரித்தாள் கனகம்.

ராஜத்திற்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் கூட ஆகவில்லை. அவள் கணவன் மணி பி. ஏ. பாஸ் செய்திருந்தும் உத்தியோகம் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருந்தான். அவன் மாமனார் இருந்தவரை குடும்பம் ஏதோ நல்லபடியாக நடந்து கொண்டிருந்தது. மூன்று மாதங்களுக்கு முன்தான் அவர் காலமானார். அவர் போன பின் குடும்பக் கஷ்டம் ரொம்பவும் அதிகமாகி விட்டது. அன்றாட ஆகாரத்திற்குக் கூடத் திண்டாட்டமாகியது. மணி எவ்வளவோ முயன்றும் வேலை கிடைக்கவில்லை. இந்த நிலையில் தாயும் மனைவியும் பட்டினியாகக் காலங் கழிப்பது அவனுக்கு மிகவும் வேதனையை அளித்தது.

கனகத்திற்குத் தான் பட்டினியாக இருப்பது கூடக் கவலையில்லை. தன் அருமை மருமகள் ராஜமும் தங்களோடு கஷ்டப்படுவதுதான் சகிக்கவில்லை. ராஜம் கஷ்டம் என்றால் என்னவென்பதே தெரியாது வளர்ந்தவள். அவள் பெற்றோர்கள் செல்வ போகமான நிலையில் உள்ளவர்கள். எனவே ராஜத்தை அவள் பெற்றோர்களிடத்தில் அனுப்பி விட்டால், அவளாவது கஷ்டப்படாமலிருப்பாள் என்று கருதினாள். எனவே, அன்று ராஜத்தை அழைத்து, "ராஜம், எங்கள் கஷ்டத்தை நாங்கள் அனுபவிக்கிறோம். நீயும் எங்களோடு ஏனம்மா கஷ்டப்படவேண்டும்? திருநெல்வேலிக்குப் போய் உன் அம்மாவுடன் கொஞ்ச நாள் இரு. மணிக்கு வேலை கிடைத்ததும் உன்னை அழைத்துக் கொள்கிறோம்" என்றாள். ராஜத்திற்குத் தன் அருமை அத்தையை விட்டுப் பிரிய மனமில்லை. என்றாலும் ஒரு நபர் குறைவதால் அவர்களுக்கு இருக்கிற கஷ்டம் கொஞ்சமாவது குறையும் என்றெண்ணினாள்.

மறுநாளே ராஜம் திருநெல்வேலிக்கு ரயிலேறி விட்டாள். ராஜம் தனியாக வந்ததைக் கண்டதும் அவள் அம்மாவுக்கு ரொம்பவும் ஆச்சரியமாகப் போய்விட்டது. மூன்று நாட்களுக்கு மேல் தங்கி யறியாத தன் மகள், ஒரு வாரத்திற்கு மேலாகியும் கணவன் வீடு போகாமலிருப்பது அவளுக்கு இன்னும் வியப்பையளித்தது. ஒரு வேளை கணவன் வீட்டில் சண்டையிட்டுக் கொண்டு வந்திருப்பாளோ என்று கருதினாள்.

"ராஜம், ஏனம்மா நீ இன்னும் ஊருக்குப் புறப்படவில்லை?" என்று மெதுவாகக் கேட்டாள் ராஜத்தின் அன்னை லக்ஷ்மி.

திடீரென்று அவள் இப்படிக் கேட்டது ராஜத்தை என்னவோ செய்தது. கலங்கிய கண்களுடன், "அம்மா, அவருக்கு வேலை கிடைக்கவில்லை. ஒரே கஷ்டம். அதனால் தான்..." என்று வார்த்தைகளை முடிப்பதற்குள் லக்ஷ்மியின் கண்கள் சிவந்து விட்டன.

"அதனால் இங்கே ஜம்மென்று சுகமாயிருக்கலாம் என்று வந்தாயாக்கும்? வெட்கங்கெட்டவளே! நாளைக்கே இங்கு விட்டுப் புறப்பட்டுவிடு. மறுமுறையும் இப்படிச் சொல்லிக் கொண்டு வந்தாயோ, நன்றாயிருக்காது. ஆமாம், சொல்லி விட்டேன்!" என்று கோபத்துடன் கத்திவிட்டாள்.

ராஜம் பதறிப் போய்விட்டாள். அம்மாவுக்குக் கோபம் வந்து விட்டால் பத்திரகாளியாகி விடுவாள் என்பது அவளுக்குத் தெரியும். பதிலொன்றும் பேசாமல் கண்ணீர் வடித்துக் கொண்டே வீட்டிற்குள் போய் விட்டாள். தான் வீட்டிலிருப்பது அம்மாவுக்குப் பொறுக்கவில்லையே என்பதை நினைக்கும் போது ராஜத்திற்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. குமுறிக் குமுறிக் கண்ணீர் வடித்தாள்.

சற்றுப் பொறுத்து லக்ஷ்மி வந்து, "ஏன் ராஜம், கோவிலுக்கு வருகிறாயா?" என்று அழைத்தாள். "நான் வரவில்லை, நீ போ!" என்று சொல்லிவிட்டாள் ராஜம். தாயாரிடம் முகம் கொடுத்துப் பேசக்கூடப் பிடிக்கவில்லை ராஜத்திற்கு. அதைக் கண்ணுற்ற லக்ஷ்மி பேசாமல் போய் விட்டாள்.

ராஜம் பார்த்தாள். 'இனி நமக்கு இங்கே என்ன வேலை? இனி இவள் கண்ணில்கூட விழிக்கக் கூடாது" என்ற வீறாப்புடன் மதுரையை நோக்கிப் புறப்பட்டு விட்டாள். அவள் வந்த இரண்டு தினங்களுக்குப் பின் தான் இந்தக் கடிதம் வந்திருக்கிறது.

* * *

கனகம் ராஜத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவளது மனம் பழைய கால நினைவிலே ஈடுபட்டுச் சுழன்றது.

ராஜத்தின் தந்தை சேகரன் கனகத்திற்கு உடன் பிறந்த அண்ணா. அந்தக் காலத்தில் கனகம் கல்யாணத்திற்குத் தயாராக இருந்த கன்னி. அப்பொழுதுதான் சேகரனுக்கு மனைவியாக வந்தாள் லக்ஷ்மி. அவள் நல்ல அழகாயிருந்ததோடு படித்தும் இருந்தாள். தன் அண்ணாவுக்கு இப்படி மனைவி கிடைத்தது அதிர்ஷ்டமென்று மிகவும் மகிழ்ந்தாள் கனகம். கனகமும் லக்ஷ்மியும் இணைபிரியாத் தோழிகளாகி விட்டனர். ஆற்றிற்கோ, கோவிலுக்கோ, சினிமாவுக்கோ, கடை வீதிகளுக்கோ, எங்கு சென்றாலும் இருவரும் ஒன்றாகவே செல்வார்கள். லக்ஷ்மியிடம் பிடிவாதமும் முன் கோபமும் இயற்கைச் சுபாவமாக இருந்தன. ஆனால் பின் அதைச் சமாதானப் படுத்தக் கூடிய தன்மையும் இருந்தது.

திடீரென்று கனகத்துக்கு மதுரையில் ஒரு மாப்பிள்ளை ஏற்பாடாகியது. நாகராஜ



தங்கை இன்னும் இங்கே இருப்பது அவ்வளவு நல்லதாகப் படவில்லை. எப்படியும் அவளை ஊருக்கு அனுப்பி வையுங்கள் !'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள் லக்ஷ்மி.

'' ஊருக்குப் போ என்று நான் எப்படிச் சொல்வேன் ?'' என்று தயங்கினான் சேகரன்.

'' புத்தி சொல்லி அனுப்பணும். உங்களுக்கு முடியாவிட்டால் நான் சொல்கிறேன் '' என்றாள் லக்ஷ்மி.

அதற்கு மேல் கனகத்தால் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. மதனி லக்ஷ்மியா இப்படிச் சொல்கிறாள் ? அவளால் நம்பவே முடியவில்லை. முகத்தை மூடிக் கொண்டே கீழே வந்து விட்டாள். ' தன் அண்ணுவுமா இதற்கு உடன்படுகிறான் !' என்றும்

நீ எப்படிக் கஷ்டப் படுகிறாயோ வென்று ஒரே கவலை. என் உயிரை எடுத்து முப்பது ரூபாய் வாங்கி உனக்கு அனுப்பி வைத்தான்" என்று தன் மனைவியின் பெருந்தன்மையைப் பற்றிப் புகழ்ந்து கூறினான். லக்ஷ்மியைப் பற்றி நல்ல அபிப்பிராயம் கொள்ள வேண்டுமென்பதற்காகத்தான் அண்ணா இப்படிச் சொல்கிறான் என்று நினைத்துக் கொண்டாள் கனகம். லக்ஷ்மிடம் அவள் அவ்வளவாகப் பேச்சு வைத்துக்கொள்ளவில்லை. லக்ஷ்மியும் மூன்று நாட்களுக்குமேல் தங்கவில்லை.

நாட்கள் ஓடின. கனகத்தின் பையன் மணி பி. ஏ.வை முடித்துவிட்டு மணத்திற்குத் தயாராக யிருந்தான். தங்கள் நிலைமைக்குத் தன் அண்ணா பெண் தருவானென்று கனகத்திற்குக் கொஞ்சமும் நம்பிக்கை யில்லை. அப்படி அண்ணா சம்மதித்தாலும் மதனி ஒருகாலும் சம்மதிக்க மாட்டாள். பெண் கேட்டு அவர்கள் இல்லையென்று சொல்லி அவமானப் படுவதை விட மரியாதையாக வேறிடத்தில் பெண் பார்ப்பது மேலாகத் தோன்றியது கனகத்திற்கு.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் எதிர்பாராத விதமாகக் கனகத்தின் வீட்டுக்குச் சேகரன் வந்தான். அவன் வந்ததும் வராததுமாய், "கனகம், மணிக்குப் பெண் பார்ப்பதாகக் கேள்விப் பட்டேனே!" என்றான்.

"ஆம் அண்ணா! அவனுக்கு வயதாகி விட்டதல்லவா?" என்றாள் கனகம்.

"என் வீட்டில் ஒரு பெண்ணிருக்கிறதை நீ மறந்து விட்டாயா?"

அவளுக்கு இது கனவா அல்லது நனவா என்பது சந்தேகமாகி விட்டது. "அண்ணா, நீ சொல்வது..."

"பொய்யல்ல, அடுத்தவனுக்குக் கொடுக்கத் தானா என் பெண்ணைக் கஷ்டப்பட்டு வளர்த்திருக்கிறேன்?"

"அண்ணா, நீயாகப் பெண் தருகிறபோது நான் மறுப்பேனா?" என்றாள் கனகம்.

மறு முகூர்த்தத்திலேயே கனகத்தின் குமாரன் மணிக்கும், லக்ஷ்மியின் குமாரி ராஜத்திற்கும் ஏகச் சிறப்புடன் கல்யாணமாகியது.

* * *

"அத்தை! அத்தை! என்ன அத்தை அப்படியே இருந்திட்டீங்க? கடிதத்தைப் படித்து விட்டீங்களா?" என்று ராஜம் குரல் கொடுத்த பின்தான் தன் உணர்வு பெற்றாள் கனகம். உடனே ராஜத்திற்கு வந்த அந்தக் கடிதத்தைப் படிக்கலானாள்.

"அருமைக் குமாரி ராஜத்திற்கு, உன் தாயார் அன்புடன் எழுதுவது: அன்று நீ என்னிடம் சொல்லாமல் திடீரென்று புறப்பட்டுப் போய்விட்டாய். அதில் எனக்கு ரொம்பவும் வருத்தம். கோவிலுக்குப் போய் விட்டு வந்தபின் தான் உனக்கு எவ்வளவோ புத்தி சொல்ல வேண்டுமென்று நினைத்திருந்தேன். அவற்றைக் கடிதத்தில் எழுத வேண்டிய நிலைக்கு வைத்து விட்டாய், கண்ணே! நீ என் வீட்டில் வந்து பல நாள் தங்குவது எனக்குப் பிடிக்கவில்லை என்று எண்ணுவாய். அது தவறு. நீ என் வீட்டில் ஆயுள் உள்ளளவும் தங்கினால்கூட நான் கவலைப் படமாட்டேன். ஆனால் நீ வந்த நிலைமை வேறு. குடும்பத்தில் கஷ்டம் வந்து விட்டதே என்று நீ மட்டும் விலகி வந்துவிடுவது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. என்னதான் கஷ்டம் வந்தாலும் கணவனோடு இணைந்து வாழ்வதை விடப் பெண்ணுக்கு வேறு பெருமையில்லை. கல்யாணமென்பது எதற்கு? மனிதனுக்கு இன்பமும் துன்பமும் எப்பொழுதுதான் வருமென்பதை யாராலும் நிர்ணயிக்க முடியாது. அப்படி வரும் இன்ப துன்பத்தில் ஒருவரை யொருவர் ஆதரவாகக் கொண்டு ஆறுதலடைவதற்குத் தான் விவாகம். இன்பத்தில் மட்டும் இணைந்து விட்டுத் துன்பத்தில் விலகிக் கொள்வது மனிதத் தன்மைக்கே, குறிப்பாகப் பெண்மைக்கே முரணானது.

இதே விஷயத்தில் உன் அத்தையும் அனுபவம் பெற்றிருக்கிறாள். இப்பொழுதுகூட அவளுக்கு என்மீது நல்லபிப்பிராயம் கிடையாது. ஆனால் அன்று அவளும் நானும் இருந்த அன்யோன்யத்தைச் சொன்னால் நீயே ஆச்சரியப் படுவாய். உன்னைப் போன்ற நிலையில்தான் அவளும் ஒரு நாள் என் வீட்டிற்கு வந்து ஒரு மாதம் தங்கினாள். கணவனைப் பற்றிச் சற்றும் அக்கறை காட்டாமல் அவள் மட்டும் சுகஜீவியாய் வாழ்வது எனக்குப் பிடிக்கவில்லை. ஒருநாள் உன் அப்பாவிடம் விஷயத்தைச் சொல்லி அவளைக் கணவனிடம் அனுப்புமாறு தூண்டினேன். நான் சொன்னவற்றை அவள் அரையும் குறையுமாகக் கேட்டிருக்கிறாள். நான் சொன்னதன் நீதியை அவள் உணராமல் என்மீது கசப்படைந்து தானாகப் புறப்பட்டு விட்டாள். அங்கு அவள் கஷ்டப்படக் கூடாது என்பதற்காக உன் அப்பாவிடம் சண்டையிட்டு ரூபாய் வாங்கி அவளுக்கு அனுப்பி வைத்தேன். ரொம்ப நாட்கள் அவள் வராததால்தான் என்மீது அவள் கோபம் கொண்டிருக்கிறாள் என்பதை உணர்ந்தேன். பிறகு அவளைப் பார்க்கச் சென்றேன். அவள் என்னிடம் சரியாகக் கூடப் பேசவில்லை. எனக்கு ரொம்பக் கவலையாகிவிட்டது. ஊருக்குத் திரும்பி வரும்போது கண்ணீர் வடித்து விட்டேன். அதன் பின் ரொம்ப நாட்கள் ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போகாதிருந்து விட்டோம். பிறகு தான் அவள் மகனுக்குப் பெண் பார்க்கும் செய்தி எட்டியது. எனக்கும் அவளுக்குமுள்ள உறவு இதோடு விட்டுப் போகக்கூடாது, உன் மூலமாவது அந்த உறவை இணைந்து விடவேண்டுமென்று விரும்பினேன். ஆனால் உன் அப்பாவுக்கோ உன்னை அங்கே கொடுக்கச் சிறிதும் இஷ்டமில்லை. அதனால் எனக்கும் அவருக்கும் நடந்த போராட்டத்தை நீ அறிவாய். எப்படியோ என்னுடைய பிடிவாதத்தினால் நீ அவளுடைய மருமகளாகி விட்டாய். எங்கள் உறவு இணைந்து விட்டது. ஆனால் அவள் மனத்திலுள்ள கசப்பு இன்னும் நீங்கவில்லை. காலப் போக்கில்தான் அதுவும் மறைய வேண்டும்.

கைப்பிடித்த கணவனின் காரியங்கள் யாவிலும் கைகொடுத்துப் பெண்தர்மத்தை நிலை நாட்டுபவள்தான் பெண். நிழல்போலக் கணவனை விட்டுப் பிரியாமல் நீ நீடூழி வாழ வேண்டுமென்பதுதான் என் பிரார்த்தனை. உன் குடும்பச் செலவுக்காக நூறு ரூபாய் அனுப்பியிருக்கிறேன். வேலை கிடைத்தவுடன் எனக்குத் தெரியப்படுத்து. வேலை கிடைக்கும் வரை உன் கணவர் சோர்ந்து விடாமலிருக்க ஆறுதல் சொல். பணம் தேவைப் பட்டால் உடனே அனுப்பி வைக்கிறேன்.

உன் அருமை அம்மா."

கடிதத்தைப் படித்து பார்த்த கனகம் ராஜத்தின் கைகளை ஆவலுடன் பற்றி "ராஜம், உன் அம்மா உனக்கு மட்டும் தாயல்ல. எனக்கும் தாய்! ஆம் கடமையை உணர்த்திய அவளே தாய்!" என்றாள் உணர்ச்சி மிக்க குரலில்.

# பொருத்தமான பிலிம் தெரிந்தெடுப்பதில் இருக்கிறது உங்கள் ஸ்னேப்ஷாட்டுகளின் தராதரம்





**மங்கலான வெளிச்சம் அல்லது துரிதமான செயல்படங்களுக்கு:** உங்களுக்கு 'கோடக்' சூப்பர்-XX தேவை. அது துரிதமான அமங்கிய ஒளியில் கூட நல்ல படங்கள் தருகிறது. தவிர, எல்லா நிறங்களையும் ஏற்பது. செயற்கை வெளிச்சத்திற்கு இன்றியமையாதது.

சூப்பர் - X X





**சிறந்த பிரிண்டுகள் மற்றும் பெரிய என்லார்ஜ்மெண்டுகளுக்கு:** 'கோடக்' ப்ளஸ்-X சிறந்தது. நிற பேதங்களை அப்பட்டமாகச் சீர்படுத்தக்கூடிய பிலிமாகையால் இது சிறப்பான பிரிண்டுகள் தருகிறது. ஏறக்குறைய சூப்பர்-XX பிலிமின் வேகமும் இதற்குண்டு.

ப்ளஸ் - X





**வெளியிடங்களில் சாதாரண படங்கள் எடுக்க:** 'கோடக்' வெரிக்ரோம் உபயோகியுங்கள். அதன் அபார எக்ஸ்போஷர் வசதி காரணம், அநேகமாக எல்லா வெளிச்ச நிலைமைகளிலும் நல்ல படங்கள் தருகிறது. ஸ்திரமான லென்ஸ் அல்லது ஷட்டர் வேகமுள்ள எளிய காமிராக்களுக்கு விசேஷ தகுதி வாய்ந்தது.

வெரிக்ரோம்



## 'கோடக்' பிலிமில் நீங்கள் எப்பொழுதும் சிறப்பான படங்கள் தயாரிக்க முடியும்

**கோடக் லிமிடெட்** (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது) பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

# தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள் ...



## லைப்பாயின் பாதுகாக்கும் நுரையினால்!




நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவறாமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது. உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.



# லைப்பாய் சோப்

L. 229-50 TM



# பாக்கியசாலி யார்?

ரா. கோ

ஹேமா நல்ல அழகி. குழி விழும் கன்னங்கள், அகன்ற நெற்றி, நீண்ட பின்னல், வில்லைப் போன்று வளைந்த புருவம், கொடி போன்ற உடல். இம்மாதிரி அழகுக் கெய் [redacted]

நிம்மதியாக எங்கேயாவது தன் சிநேகிதி வீட்டிற்குப் போய்விடலாமே என்றால் அவ்வளவுதான். அவள் தரிசனத்திற்காகக் காத்துக் கிடக்கும் அந்தத் தெருப் பையன்கள் [redacted]

போனார். அவசரம் அவசரமாக உறையைக் கிழித்துப் படிக்கலானார்:

மிஸ்டர் சுதர்சனம் அவர்களுக்கு.

உங்கள் பெண்ணை வெளியில் எங்கும் அனுப்பாதீர்கள். அவள் எங்கேயாவது வெளிக் கிளம்பி விட்டால் அவ்வளவுதான். எங்களுக்கு இருப்பே கொள்ளவில்லை. அவள் அழகைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் போல் இருக்கிறது. இதனால் அவள் எங்கெங்கு போகிறாளோ அங்கேயெல்லாம் போகும்படி நேருகிறது. ஆகையால் தயவு செய்து வீட்டில் வைத்துக் கொள்ளவும்.

இப்படிக்கு

...............

என்று அக் கடிதத்தில் எழுதியிருந்தது!

"சட், அவள் அழகு அவளைப் படுகுழியில் தள்ளிவிடும்போல் இருக்கிறதே. ஆம், இந்த ஊரை விட்டே கிளம்பிவிட வேண்டும். எங்கேயாவது ஒரு கிராமத்திற்குச் சென்றுவிட வேண்டியதுதான்!" என்று அவர் தமக்குள் சொல்லிக் கொண்டார்.

அன்று ஹேமாவுக்கு யாரிடமாவது தன் வேதனையைச் சொல்லிக் கதறி அழ வேண்டும்போல் தோன்றியது. அப்பொழுதுதான் தன் மனப்புண் ஆறும் என்று நினைத்தாள். உடனே தன் தோழி கமலாவின் நினைவு வந்தது. அவள் ஹேமாவின் உயிர்த் தோழி. ஹேமாவின் கஷ்டங்களெல்லாம் அவளுக்கு நன்றாகத் தெரியும். கமலாவின் வீட்டுக்கு அவள் அடிக்கடி போவதற்கு மற்றொரு காரணமும் உண்டு. கமலாவுக்கு அண்ணன், தம்பி என்று யாரும் இல்லை. ஆகையால்தான் அவளை நினைத்தவுடன் அவள் வீட்டிற்குப் போகப் புறப்பட்டாள்.

"என்ன ஹேமா, உன்னை இத்தனை நாட்களாகக் காணும்" என்று அன்புடன் வரவேற்றாள் அவள் தோழி கமலா.

"என்னமோ போ, கமலா எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை."

"என்ன நடந்தது ஹேமா, ஏன் மனசை அலட்டிக் கொள்கிறாய்? விஷயத்தை என்னிடம் சொல்" என்று பரிவுடன் கேட்டாள்.

"உன் கிட்டே சொல்லி ஆறுதல் பெறத்தான் வந்திருக்கிறேன்" என்றாள் ஹேமா கம்மிய குரலில். பிறகு அவள் "கமலா!" என்றாள் ஒரு தடவை. மறு நிமிஷம் அவளையறியாமல் கண்களிலிருந்து நீர் பெருகியது. மிகவும் கஷ்டப்பட்டு அழுகையை யடக்கிக் கொண்டு கண்களிலிருந்து வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டாள். திரும்பவும் "கமலா, என் அழகே எனக்குச் சத்துருவாக யிருக்கிறது!" என்று கூறி அன்று வந்த கடிதத்தைப் பற்றிச் சொன்னாள்.

"ஹேமா, நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதே. அத்தானையாவது மாமாவையாவது கல்யாணம் பண்ணிக் கொள். எங்கேயாவது டில்லி, பம்பாய் என்று போய் விடு" என்றாள் கமலா பெரிய மனுஷிமாதிரி.

"கமலா, உண்மையாகச் சொல்கிறேன். அவர்களைக் கண்டால் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. நான் என்ன பண்ணுவேன்" என்றாள் துக்கம் கலந்த குரலில் ஹேமா.

இந்தச் சமயத்தில் "பாம் பாம்" என்று சத்தமிட்டுக் கொண்டு ஒரு டாக்ஸி கமலாவின் வீட்டு வாசலில் வந்து நின்றது. காரிலிருந்து லினன் சட்டையும், ட்வீட் கால் சட்டையும் அணிந்த ஒரு யுவன் இறங்கி வந்தான். அவனைக் கண்டதும் கமலா, "வாருங்கள் அண்ணா! வாருங்கள்" என்று மகிழ்ச்சியோடு வரவேற்று அவனை அழைத்துக் கொண்டு உள்ளே போனாள்.

கமலா பத்து நிமிஷம் கழித்து ஹேமாவிடம் வந்தாள். "ஹேமா, உன்னை நான் காக்க வைத்துவிட்டேன், மன்னித்துக் கொள். இப்பொழுது வந்தது யார் தெரியுமோ? என் சித்தப்பா பிள்ளை ரகு. புது டில்லி சர்க்கார் காரியாலயத்திலே பெரிய வேலையில் இருக்கிறார்" என்று கூறினாள்.

"உனக்கு ஒரு அண்ணா இருக்கிறார் என்று நீ இதுவரையில் சொன்னதேயில்லையே!" என்று கேட்டாள் ஹேமா.

அப்பொழுது, "கமலா, நான் ஊரிலிருந்து வந்திருக்கிறேன். என்கிட்டே பேசவே மாட்டேங்கிறாயே?" என்று கேட்ட வண்ணம் வந்தான் ரகு. அங்கு ஒரு புது முகத்தைக் கண்டவுடன் திடுக்கிட்டு நின்று விட்டான்.

"அண்ணாவா? வாங்கோ, வாங்கோ! இவள்தான் என் சிநேகிதி ஹேமா!" என்று கூறி அறிமுகம் செய்து வைத்தாள் கமலா.

"ஓ, அப்படியா, சரி நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். நான் குறுக்கே வரவில்லை" என்று சொல்லி விட்டு உள்ளே சென்று விட்டான் ரகு. ஆனால் அப்புறம் வேண்டு



மென்றே அவர்கள் இருக்குமிடத்திற்குப் பல தடவை வந்து போனான். ஹேமா பிறகு அங்கே அதிக நேரம் தங்கி யிருக்கப் பிரியப் படவில்லை. கொஞ்ச நேரத்துக் கெல்லாம் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள்.

இரண்டு நாள் சித்தப்பா வீட்டில் தங்கி விட்டு, பிறகு மதுரைக்குத் தன் தாய் தந்தையர்களைப் பார்க்கப் போகலாம் என்ற தீர்மானத்துடன் வந்தவன் மூன்று, நான்கு நாட்களாகியும் ஊருக்குப் புறப்படவில்லை. இதற்குக் காரணம் ஹேமாதான். ரகுவின் சிந்தனை ஹேமாவிடமே இருந்தது.

அந்தச் சமயத்தில் "கமலா!" என்றழைத்தபடி உள்ளே வந்தாள் ஹேமா. ரகுவின் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. 'ஆம் இன்று, உண்டு இல்லை என்று தீர்ப்புக் கட்டி விட வேண்டும்' என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டான். "கமலா, வெளியே போயிருக்கிறாள்" என்றான் ரகு.

"சரி அப்படியானால் நான் போகிறேன். நான் வந்துவிட்டுப் போனதாகக் கமலாவிடம் சொல்லுங்கள்" என்று கூறியபடி திரும்ப முயன்றாள் ஹேமா.

"ஹேமா" என்றான் ரகு பயம் கலந்த குரலில். திடுக்கிட்டுத் திரும்பினாள் ஹேமா. "உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்" என்றான் ரகு.

"என்ன விஷயம்?"

"ஹேமா, நான் உன்னை நேசிக்கிறேன். ஆனால் உன் செய்கை எனக்குப் புரியவில்லை. நீ என்னை நேசிக்கிறாயா?"

ஹேமாவுக்கு முகமெல்லாம் கோபத்தால் ரத்தமெனச் சிவந்தது. சுடச் சுட பதில்



அளிக்க வேண்டுமென்று நினைத்தாள். உடனே "நன்றாயிருக்கிறது. நல்ல கேள்வி கேட்டீர்களே! ஏதோ நல்ல மனுஷ்யன் போல் இருந்தீர்களே என்று பார்த்தேன்" என்றாள் ஆக்ரோஷத்துடன்.

"நீயும் என்னை நேசிக்கிறாயா என்று கேட்டேனே யொழிய வேறு ஒன்றும் கேட்கவில்லையே! இதில் என்ன தப்பு?" என்று கேட்டான் ரகு.

"ஒரு பெண்ணிடம் இதைக் கேட்க எவ்வளவு தைரியம் வேண்டும்?"

"அப்படியானால் என்னிடம் உனக்கு அன்பு இல்லை என்று சொல்லாமலே தெரிந்து விட்டது" என்றான் ரகு.

"ஆம், அதில் என்ன சந்தேகம். என் மனதை வேறொருவருக்கு என்று இடமளித்த பிறகு அதில் உமக்கு இடம் இருக்குமோ?" இம்மாதிரி அவள் வேண்டுமென்று அவன் மனசு புண்படட்டும் என்றுதான் கூறினாள்.

"அப்படியானால் உண்மையாக நான் உன்னிடம் மன்னிப்புக் கோருகிறேன். நான் இனி உன் சகோதரன் மாதிரி" என்றான் ரகு தழுதழுத்த குரலில். பதில் ஒன்றும் கூறாமல் 'விர்' என்று சென்று விட்டாள் ஹேமா.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த மறு நாளே ரகு ஊருக்குக் கிளம்பி விட்டான். இதைப் பற்றிக் கமலாவிடம் ஒன்றுமே பிரஸ்தாபிக்கவில்லை. ஹேமாவும் அவளாகவே ஏதாவது கேட்பாள் என்று நினைத்தான். ஆனால் அவள் ஒன்றும் கேட்கவில்லையாதலால் ஹேமாவும் கமலாவிடம் ஒன்றும் சொல்லவில்லை.

* * *

வருடங்கள் உருண்டோடின. ரகு புது டில்லி சர்க்கார் உத்தியோகத்தில் பெரிய உத்தியோகஸ்தனாகி விட்டான். நல்ல சம்பளம், கார், பங்களா முதலிய வசதிகளுடன் புது டில்லியில் சௌகரியமாக இருந்தான்.

கமலாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டதாகவும் உடனே புறப்பட்டு வரும்படியும் ரகுவுக்கு அவன் சித்தப்பாவிடமிருந்து கடிதம் வந்திருந்தது. உடனே மதராஸுக்குப் புறப்பட்டான் ரகு. கமலாவின் வீடு அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. கல்யாணத்திற்கு முன்னதாகவே உறவினரெல்லோரும் வந்திருந்தனர்.

கமலாவை எங்கே காணோம் என்று நினைத்தபடி அவன் அறைக்குள் நுழைந்தான் ரகு. உள்ளே சென்றவுடன் ஸ்தம்பித்து நின்று விட்டான். ஏனெனில் உள்ளே கமலாவுடன் ஹேமாவும் இருந்தாள். ஆனால் மறு நிமிஷம் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டான். தலை குனிந்த வண்ணம் அறையை விட்டு வெளியேறினான்.

காலடிச் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்த ஹேமா ரகுவைக் கண்டதும் திடுக்கிட்டாள். சுருள் சுருளான மயிரும், உருண்டையான முகமும், எடுப்பான மூக்கும், விசாலமான நெற்றியும் இவைகள் ஒருங்கே

கொண்ட உருவத்தை முதன் முதலில் கண்டாள். அவளது மனம் பனிக் கட்டியைப் போல் உருகியது. இதுவரை இல்லாத அன்பு அவள் உள்ளத்தில் அப்பொழுதுதான் பெருக்கெடுத்து ஓடலாயிற்று. ஏற்கெனவே, அவள் முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைத்து மனம் புழுங்கிக் கொண்டிருந்தாள். அன்று அவள் பார்த்த ரகுவின் களங்கமற்ற முகம் இன்னும் அவள் கண்ணெதிரிலேயே நின்றது. தான் அன்று நடந்து கொண்ட விதத்தை நினைத்து அவள் வருந்தினாள். இன்று ரகுவை நேரில் பார்த்ததும் அவளுக்கு ஒரு கணம் ஒன்றும் தோன்றவில்லை.

"கமலா!" என்று அவள் அம்மா அழைத்தாள். "இதோ வருகிறேன்" என்று உள்ளே ஓடினாள் கமலா.

இன்னொரு முறை அவளைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலைக் கட்டுப் படுத்த முடியாமல் உள்ளே போய் விட்டான் ரகு. ஆனால் அங்கு கமலாவைக் காணவில்லை. உடனே வெளியே வர யத்தனித்தான்.

"உங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்க வேண்டும்" என்ற குரலைக் கேட்டுச் சற்றுத் தயங்கி நின்றான் ரகு.

"நான் உங்களை நேசிக்கிறேன்" என்று தழுதழுத்த குரலில் கூறினாள் ஹேமா.

"என்ன!" என்றான். ஆச்சரியம் கலந்த குரலில், அவனுடைய காதுகளை அவனாலேயே நம்ப முடியவில்லை. தான் காண்பது கனவா அல்லது நினைவா என்று நினைத்தான். ஆம், கனவல்ல. அந்த அழகுத் தெய்வத்தின் நாவிலிருந்துதான் அந்த வார்த்தைகள் வந்தன. சற்று நேரம் மௌனம்.

"உன் மனம் வேறொரு ஆடவனிடமல்லவா பறி போய்விட்டது!" என்றான்.

"அன்று அறியாமையினால் உங்கள் மனசைப் புண்படுத்த வேண்டுமென்பதற்காக அம்மாதிரிக் கூறினேன். மன்னிக்க வேண்டும்" என்றாள் ஹேமா தாழ்ந்த குரலில்.

"என்ன? உண்மையாகவா!" என்று கூறியபடி அருகில் சென்று அவள் மலர்க்கரத்தைப் பிடித்தான் ரகு.

"ஏபஷ்! எத்தனை நாளாக இந்தக் காதல் நாடகம்?" என்று கேட்டபடியே உள்ளே நுழைந்தாள் கமலா.

இருவரும் திடுக்கிட்டனர். இருவர் முகத்திலும் அசடு வழிந்தது! "பயப்படாதே, ஹேமா! நான் உன் அப்பாவிடம் சென்று கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்கிறேன். அடுத்த முகூர்த்தத்தில் நான் உனக்குத் தோழியாக இருப்பேன்" என்றாள் கமலா.

"அவன்தான் உனக்கு மன்னியாக மாறி விடுவாளே!" என்றான் ரகு.

"நான் நாத்தனாராக மாறி உன்னை என்ன பாடுபடுத்துகிறேன் பார்!" என்றாள் கமலா புன்சிரிப்புடன்.

இதைக் கேட்டவுடன் ஹேமாவின் முகம் நாணத்தால் சிவந்தது!

## கோடி கோடி நமஸ்காரம்!



# அவசரத்திற்கு உதவும் நண்பன்



மயக்கமோ மூர்ச்சையோ ஏற்படும் வேளை டாம்கோ ஓ-டி-கொலோன்தான் சரியான தெளிவூட்டும் மருந்து. தலை வலி யுண்டானால் ஒரு லேசான துணி யில் சில துளிகள் விட்டு நெற்றிமேல் போட்டுக் கொண்டால் ஜிலுஜிலுப்பா யிருக்கும். தலைவலியும் சமனமாகும்.



வெட்டுக் காயங்கள், ரணங்களுக்கு டாம்கோ ஓடிகொலோன் அவசரத் திற்குதவும் ஒரு சிறந்த கிருமிநாசினி. அதிலுள்ள சுத்தமான ஸ்பிரிட் நோய்க் கிருமிகளைக் கொன்று விஷம் பரவாமல் பாதுகாக்கும்.

டாம்கோ ஓ-டி-கொலோனின் உற்சாகமூட் டும் நறுமணம் காரணம், நோயாளிகளின் அறையில் தெளிக்கவும், ஜுரத்திலும் ஏற்படும் சிறுநோவுகளை நிவர்த்திக்கவும் அது இன்றியமையாதது. ஒரு பாட்டில் டாம்கோ ஓ-டி-கொலோன் உண்மையில் உற்ற நண்பனே. எல்லா குடும்பங்களிலும் அது அவசியம் இருக்க வேண்டியதுதான்.




A TATA PRODUCT



டாம்கோ

## ஓ-டி-கொலோன்

டாடா ஆயில் மில்ஸ் கோ., லிமிட்.

TE 7563




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் உராய்வுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.



நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.

# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

**புரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணமுள்ளது.**

# நீரிழிவு

## ஏழு நாட்களில்

## குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் **நீரிழிவு (DIABETES)** என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ள வரை சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறுநீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறு நீரும் குறைகிறது. 3-வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்குமேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

***50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0***

*(பாக்கிங், தபால் செலவும் இனாம்)*

•

**வீனஸ் ரிஸர்ச் லாபரட்டரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

# ருமேனியா

## ஜெயமணி

பதின் மூன்றாம் நூற்றாண்டில் துருக்கியர்கள் படை யெடுத்தபோது ருமேனியா பிரதேசம், மால்டேவியா, வல்லாசியா என இரண்டு நாடுகளாகப் பிரிந்து இருந்தது.

வல்லாசியாவைச் சேர்ந்த வீர மைக்கேலின் முயற்சியால் பதினாறாம் நூற்றாண்டில் அந்த நாடுகள் தற்காலிகமாகச் சுதந்திரம் பெற்றன. எனினும் அந்தச் சுதந்திரம் நிலைப்பதற்குள் மைக்கேல் கொலையுண்டதால், துருக்கியர்கள் மீண்டும் அவ்விரு நாடுகளையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டார்கள்.

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் மண்ணாசை காரணமாக ருஷ்யாவுக்கும் துருக்கிக்கும் பல தடவை யுத்தங்கள் மூண்டன. மேற்படி யுத்தங்கள் ருமேனிய மண்ணில்தான் நிகழ்ந்தன. அப்போது ருமேனியாவிடமிருந்து ஆஸ்திரியாவும் ருஷ்யாவும் சில பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொண்டன.

எனினும், துருக்கியர் தங்களுடைய எஜமானர்களாக இருந்து வருவதை வெறுத்த ருமேனியர்கள், தங்களுடைய சுதந்திரப் போராட்டத்தை விடாது நடத்தி வந்தனர். மேற்படி போராட்டத்தில் அவர்களுக்கு வெற்றியும் கிடைத்து வந்தது.

இறுதியாக 1859-ம் ஆண்டில் மால்டேவியா, வல்லாசியா இரு நாடுகளைச் சேர்ந்தவர்களும் தங்களுடைய மன்னராக ஒருவரைத் தேர்ந்தெடுத்தார்கள். அக்காலத்தில்தான் மேற்படி இரு நாடுகளும் ஐக்கியம் அடைந்தன. இரண்டும் சேர்ந்து ருமேனியா என்ற பெயருடன் ஒரே நாடாயிற்று.

ஆனால், துருக்கியின் ஆதிக்கத்திலிருந்து ருமேனியா சுதந்திரம் பெற்ற பிறகு கூட, 1918-ம் வருஷம் வரையில் அது ஒரே தலைமை சர்க்காரின் கீழ் இருக்கவில்லை.

முதலாவது உலக மகா யுத்தம் மூண்டபோது, ஆரம்பத்தில் ருமேனியா நடுநிலைமை வகித்து வந்தது. ஆனால் அது பிறகு ஆஸ்திரியா — ஹங்கேரிமீது யுத்தப் பிரகடனம் செய்தது. அந்த நாட்டைச் சேர்ந்த டிரான்ஸில்வேனியா முதலிய பல மாகாணங்களிலும் ஏராளமாக ருமேனியர்கள் வசித்துக் கொண்டிருந்ததுதான் ருமேனியாவின் யுத்தப் பிரகடனத்துக்குக் காரணம்.

அந்த யுத்தத்தில் முதலில் ருமேனியா வெற்றி பெற்றதெனினும், பிறகு அதன் மீது ஜெர்மன், ஆஸ்திரியத் துருப்புகள் படையெடுக்கத் தொடங்கி வெற்றியும் பெற்றன.

எனினும் மீண்டும் 1918-ல் ஜெர்மனி தோல்வியுறும் தறுவாயில் இருந்தபோது, முதலில் தோல்வியுற்ற ருமேனியா மறுபடியும் ஜெர்மனிமீது போர் தொடுத்தது.

முதலாவது மகா யுத்தத்தில் ஜெர்மனி தோல்வியுற்றபோது ஏற்பட்ட உடன்படிக்கையின் பலனாக, ருமேனியாவுக்கு ஹங்கேரி-ஆஸ்திரியாவைச் சேர்ந்த மூன்று மாகாணங்கள் கிடைத்தன.

* * *

முதலாவது உலக யுத்தத்துக்குப் பின் ருமேனியர்களிடையே மகத்தான அரசியல் விழிப்பு உண்டாயிற்று. ருமேனிய விவசாயிகளின் ஏகோபித்த கோரிக்கைக்கு இணங்க, அங்கு நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டன. பெரிய நிலச் சொந்தக்காரர்களின் நிலங்களைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு, அவைகளை ஏழை விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

1928-ம் வருஷம் ருமேனியாவில் தேசிய விவசாயக் கட்சியினர் அதிகாரத்துக்கு வந்தார்கள். 1929-ல் உலகம் முழுதும் ஏற்பட்ட பொருளாதார மந்தம், ருமேனிய சர்க்கார் தங்களுடைய நிலச் சீர்திருத்தச் சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவதற்குத் தடையாக அமைந்தது. பொருளாதார மந்தத்தினால் ருமேனிய விவசாயிகள் மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளாயினர். அதை ருமேனிய சர்க்கார் சமாளிக்க முடியவில்லை. மற்றும் பல ஊழல்கள் காரணமாக ருமேனிய சர்க்கார் மக்களின் கோபத்துக்கு ஆளாக நேர்ந்தது.

சர்க்கார் மீது ஆத்திரம் கொண்ட மக்கள் கம்யூனிஸ்டு, பாசிஸ்டுக் கட்சிகளின் தயவை நாட முற்பட்டார்கள்.



ருமேனியாவின் தலைநகரான புகாரெஸ்ட்.




இச் சந்தர்ப்பத்தில், 1930-ம் வருஷம் கரோல் மன்னர் மீண்டும் ருமேனியாவுக்குத் திரும்பி வந்தார். அவர் சிம்மாசனம் ஏறக் கூடாது என்று ஏற்கெனவே செய்திருந்த சட்டத்தை ருமேனிய பார்லிமெண்டு ரத்துச் செய்து, கரோலை மீண்டும் ருமேனிய மன்னராகப் பிரகடனம் செய்தது.

எனினும் ஒழுக்கமில்லாத கரோல் மன்னரை ருமேனிய மக்கள் வெறுக்கத் தொடங்கினர். ஜனங்களின் ஆதரவைப் பெற முடியாததால் கோபம் கொண்ட கரோல், பலம் பொருந்திய தேசிய விவசாயக் கட்சியை எதிர்க்கலானார். அவரது அதிகார ஆசைக்கு மேற்படி கட்சி முட்டுக்கட்டை போட்டதே, அக் கட்சியின்மீது கரோல் மன்னருக்கு ஏற்பட்ட சீற்றத்துக்குக் காரணமாகும்.

கடைசியாக, கரோல் ஜனங்களிடையே செல்வாக்கு பொருந்திய கட்சியை அலட்சியம் செய்து விட்டு, தன் கைப் பொம்மைகளான சில அரசியல் வாதிகளின் உதவியால் ராஜ்யாதிகாரத்தை நடத்த முற்பட்டார். 1923-ம் வருஷத்தில் ஏற்பட்ட ருமேனிய அரசியல் திட்டம் ரத்தாயிற்று. அதன் ஸ்தானத்தில் கரோல் மன்னரின் - சர்வாதிகார ஆட்சி அமுலுக்கு வந்தது.

இச்சந்தர்ப்பத்திலே, ருமேனியாவில் இரும்புக் காவற் படைகள் என்ற எதிர்க்கட்சிகாளுக்கு நாள் வலிமை பெற்று வந்தது. தீவிர வாதிகள் அடங்கிய அக் கட்சியினர் நாஜியர்களின் உதாரணத்தைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள். ஜெர்மனி, இத்தாலி இவற்றைத் தவிர மற்ற ஐரோப்பிய நாடுகளுடன் ருமேனியா எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது என்பதே மேற்படி கட்சியின் கொள்கை. பொது வுடைமை வாதிகளையும் யூதர்களையும் இரும்புக் காவற் படையினர் தங்களுடைய ஜன்ம விரோதிகளாகக் கருதினர். அவர்கள் ஜெர்மன் நாஜியர்களைப் பின் பற்றி, கொலை, சித்திரவதை முதலிய பயங்கர முறைகளைத் தங்களுடைய ஆயுதங்களாகக் கொள்ளச் சிறிதும் தயங்க வில்லை. 1938 - ல் அவர்களுடைய சதிக்கு இலக்காகி ருமேனியா பிரதம மந்திரி அயோன் டியூகா கொலையுண்டார்.

சர்வாதிகார வெறி கொண்ட இரும்புக் காவற் படையினரை அடக்குவதற்காகக் கரோல் மன்னர் தம் சர்வாதிகாரத்தை உபயோகிக்கலானார்! அவரது கட்டளைக்கு இணங்க, மேற்படி கட்சித் தலைவர்கள் கைதியாகி, சுடப்பட்டார்கள்.

அதன் பின்னரும் கூட இரும்புக் காவற் படையின் வலிமை குன்றவில்லை. எனவே மேற்படி கட்சியினருக்கும் கரோல் மன்னருக்கும் போராட்டம் வெகு உக்ரமாக நடந்து வந்தது. அதன் காரணமாக, ருமேனியாவில் உள்ள ஜனநாயக வாதிகளும் யூதர்களும் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகித் தவிக்கும்படி நேர்ந்தது.

* * *

இந் நிலைமையில், இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமாயிற்று. அந்த யுத்தத்தில் ருமேனியா நடு நிலைமை வகிக்க வேண்டும் என்பது கரோல் மன்னரின் நோக்கமாக இருந்தது. அவர் அச்சு நாடுகளுக்கு விரோதமாக நேச தேசங்களைத் தூண்டிவிட முற்பட்டார்; நேசதேசங்களுக்கு விரோதமாக அச்சு நாடுகளைத் தூண்டினார். இரு கட்சிகளுடனும் நட்பாக இருப்பதற்காக அவர் இன்னும் எத்தனையோ தந்திரங்கள் செய்தார்.

1940-ல் பிரான்ஸ் வீழ்ச்சி யுற்றது. அதே சமயம் இத்தாலியும் யுத்தத்தில் பிரவேசித்தது. மேற்படி இரண்டு சம்பவங்களின் விளைவாக, கரோல் மன்னரின் தந்திரங்கள் எல்லாம் வீணாயின.

அப்போது ஐரோப்பாவில் ருஷ்யாவும் ஜெர்மனியுமே வலிமை பெற்று விளங்கியதால், அந்த வல்லரசுகளின் கட்டளைகளுக்கு ருமேனியா இணங்க வேண்டியதாயிற்று.

ருமேனியாவைச் சேர்ந்த பெஸ்ஸரேபியாவையும் புகோவினாவையும் ருஷ்யா கைப்பற்றிக் கொண்டது. ஜெர்மனியின் வற்புறுத்தல் காரணமாக, ருமேனியாவைச் சேர்ந்த மற்றொரு பிரதேசத்தை அது பல்கேரியாவுக்கு விட்டுக் கொடுக்கும்படி நேரிட்டது. ஹங்கேரியின் பங்கிற்கு ருமேனியா டிரான் சில்வேனியாவைக் கொடுக்க நேர்ந்தது. தங்கள் நாட்டைச் சேர்ந்த பிரதேசங்கள் அவ்வாறு கொள்ளை போவதைக் கண்ட ருமேனியர்கள் மன்னர்மீது மிகுந்த ஆத்திரம் கொண்டனர்.




“இரண்டு வருடங்களாக எனது முகத்தில் பருக்களும், தடிப்புகளும் நிறைந்து இருந்தன. கைக்குக் கிடைத்த எல்லாவிதமான தைலங்களையும், க்ரீம்களும், களிம்புகளும் உபயோகித்தும் யாதொரு பலனும் சிறிதும் காணாததனால் பெரிதும் கவலையுற்றேன். கடைசியில் அதிர்ஷ்டவசமாக “க்ருஷன்” உபயோகிக்கத்தீர்மானித்தேன். ஆச்சரியம்! ஆறு வாரங்களில் எனது முகம் யாதொரு களங்கமுமின்றி ஆனதோடு இதுவரை ஒருவிதமான பருவோ, புள்ளிகளோ வந்ததில்லை. தினந்தோறும் “க்ருஷன்” உட்கொள்ளும் நான் அது இல்லாமல் ஒரு நாளும் இருக்க மாட்டேன்.” —Mrs. J.A.

முகத்திலுள்ள பருக்களையோ அலட்சணமான புள்ளிகளையோ மறைக்க முயலாதீர்கள். இரத்த அசுத்தியே இவற்றிற்குக் காரணமாதலால் உட்புற சிகிச்சையே இவற்றின் மூல காரணத்தைத் தாக்கும். “க்ருஷன்” இரத்தத்திலுள்ள அசுத்தங்களை வெளியேற்றட்டும்; உடனே சருமத்தின்மேலுள்ள சகலவித களங்கங்களும் அகன்றுவிடும். தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு “க்ருஷன்” உங்களது இரத்தத்தைச் சுத்தமாய் வைத்திருப்பதோடு சருமத்தை ஆரோக்கியமாயும், தெளிவாயும் வைத்திருக்கிறது.

**“க்ருஷன்”** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 5




அந்த ஆராய்ச்சிக் கூடம் வைத்தியக் கல்லூரியை ஒட்டி, விசாலமான கடற் கரையிலே நின்றது. வைத்திய ஆராய்ச்சி நிபுணர்கள் ஆரோக்கியமான கடற் காற்றை வாங்கிக் கொண்டே, ஒருமனப்பட்டு உடலின் தத்துவங்களையும்நோய்களின் வகைகளையும் ஆராய்கிற வைத்திய நிலையம் அது.

கப்பல்களின் போக்குவரத்தை நிர்வகிக்கிற ஒளி நிலையம் ஒன்றும், மேக வெள்ளத்துக்குள் ஒளிந்து விளையாடுகிற விண்மீன்களைப் பார்வை கொண்டு வலைவீசிப் பிடிக்கும் தொலை நோக்கி நிலையம் ஒன்றும் அதன் அருகில் இருந்தன. மனித சேவை என்ற இலக்ஷிய கருதியில் இந்த மூன்றும் இசைந்து நின்று கொண்டிருந்தன, அலைமோதும் அந்தக் கரைகாணாக் கடற்கரையிலே.

அகன்ற கண்களும், புருவங்கள் கூடுகிற நெற்றி மையத்தில் நெளியும் மின்னற் கோடும், கூரிய நீண்ட மூக்கும், டாக்டர் வைத்தியநாதனை அறிமுகப் படுத்தின. கல்லூரியின் வைத்திய ஆராய்ச்சிப் பேராசிரியர் அவர். மேனாடுகள் சென்று பல ஆராய்ச்சிகள் நடத்தி, சிறப்பான பட்டங்களோடு இந்தியாவுக்குத் திரும்பியவர். அவருடைய அந்த ஒளி வீசும் கண்களைக் கூர்ந்து பார்த்தால் அவற்றினுள் தன்னை மறந்த யோகி ஒருவனுடைய லயம் மிதக்கக் காணலாம். சில சமயங்களில் அந்த லயம் பித்தாக முதிர்ந்து பரபரக்கும். செய்யும் செயல்களிலுங் கூட அது படபடப்பாகப் பரிணமிக்கும்.

டாக்டர் வைத்தியநாதன் மனித இதயங்களுக்கு ஏற்படுகிற பயங்கர நோய்களையும், அவை தோன்றும் காரண மூலங்களையும் ஆராய்ந்து, அவற்றுக்கான வாசி முறைகளையும், தடுப்பு மருந்துகளையும் காணுவதில் முனைந்திருந்தார்.

வான சாஸ்திரி ஒருவரின் அனுபவமும் வைத்திய ஆராய்ச்சியாளரின் அனுபவமும் பல விதங்களில் ஒன்றாகவே இருக்கும் என்று டாக்டர் அடிக்கடி சொல்வதுண்டு. எவ்வளவுதான் நாம் சொந்தம் பாராட்டினாலும், இந்தப் பொல்லாத மனித உடல், கரு நீல வானத்தைப் போலவே நம்முடைய பார்வைக்கும் ஆராய்ச்சிக்கும் எட்டாத தொலைவிலே போய் நின்று கொள்கிறது என்பது அவருடைய அனுபவம். ஆனாலும்—அதனாலேதான் என்றுகூடச் சொல்லலாம் — அந்த ஆராய்ச்சியில் அத்தனை ரஸமும், தீராத தாகமும் இருக்கிறது என்று அவர் கூறுவார். உண்மை தானே! தொலை நோக்கியின் மூலம் வானத்தைப் பார்த்துக் கொண்டேயிருக்கும் ஒரு விஞ்ஞானியின் கண்முன் திடீரென்று எங்கோ ஒரு மறைவுக்குள் இருந்து, புதிய (அதாவது பழைய, ஆனால் இதுவரை தெரியாத) நக்ஷத்திரம் தலையைக் காட்டி விட்டு மறைந்து விட்டால் எப்படியிருக்கும்! மறைவுக்குள்ளே ஒன்று இருக்கிறது ஒன்று புதிதாகத் தெரிந்து விட்டது என்பதில் எக்களிப்பு. ஆனால் அது தன்னோடு கண்ணும் பொத்தி ஆடுகிறதே என்பதில் ஆத்திரம்; மீண்டும் அதைக் கண்டு பிடித்து விடுவோம் என்ற நம்பிக்கை; கண்டு பிடிக்க வேண்டும் என்ற உறுதி; அந்த உறுதியிலிருந்து பிறக்கும் லயம். பிறகு வெறி — இப்படியாக எத்தனை உணர்ச்சிகளின் சுழிப்பில் மூழ்கி முழுகித் தன்னை இழந்து விடுவான் அந்த வான சாஸ்திரி. அப்படித்தான் இருந்தார் டாக்டர் வைத்தியநாதனும்.

ஒரு நாள் இதயப் பரிசோதனையின் போது, மனிதர்களுக்கு இரத்த வேகம் திடீரென்று அதிகரித்து அதனால் இரத்தக் குழாய்களில் வெடிப்பு ஏற்படுவதன் காரண நுட்பம் மின்னல் பளிச்சிட்ட மாதிரி அவருடைய ஆராய்ச்சிப் புலனில் துலங்கியது. ஆனால் அந்த நுட்பமான பின்னலைப் பிடித்து நிறுத்த அவரால் முடியவில்லை. முயன்று, முயன்று, முயன்றுகொண்டேயிருந்தார்.

* * *

“இன்று மத்தியானம் நீங்கள் ஏன் சாப்பிட வரவில்லை!” என்று கேட்டாள் டாக்டரின் அருமை மனைவி. அப்பொழுது இரவு ஒன்பது மணிக்குமேல் இருக்கும்.

“புதிதாக முயல் குட்டிகளின் இதயத்தைக் கொண்டு வந்து பரிசோதனை செய்து கொண்டிருந்தேன். ஒரு ஐம்பது இருக்கும். நேரம் போனதே தெரியவில்லை!” என்றார் டாக்டர். அவருடைய குரலில் மகத்தான ஒரு காரியத்தைச் செய்து முடித்த திருப்தி இருந்தது.

“முயல் குட்டிகளின் இதயங்களா!” என்று ஆச்சர்யத்தோடு மனைவி கேட்டாள். அந்தக் கேள்வியில் அபரிமிதமான திகைப்பு இருந்தது.

“ஆமாம்” என்று சர்வ சாதாரணமாகச் சொன்ன டாக்டர், ‘இதில் திகைப்பதற்கு என்ன இருக்கிறது’ என்று அவளைவிட மிகவும் அதிகமாகத் திகைத்தார்.

மனைவி கேட்டாள்: “ஏன் இப்பொழுது மனிதர்களை விட்டு விட்டீர்களா! — முயல் குட்டிகளைப் பிடித்திருக்கிறீர்களே!”

டாக்டருக்குச் சிரிப்பு வந்தது; சொன்னார்: "மனித இதயங்களைப் பிடிப்பதற்காகத்தான் முயல் குட்டிகளைப் பிடித்திருக்கிறோம்."

டாக்டரின் மனைவிக்கு இந்த விஷயம் புரியவில்லை. வைத்தியநாதன் சற்று விளக்கம் கூறினார். மனித இதயங்களைக் கொண்டு வந்து ஆராய்ச்சி நடத்துவது என்பது முடியாத காரியம் என்றும், முயல் குட்டிகளின் இதயம் மனித இதயத்தைப் போலவே இயங்குவதால் அதையே உபயோகிப்பதாகவும் சொன்னார். ஆனால் மனைவியின் இதயத்துக்கு இது ஒத்துக் கொள்ளவில்லை.

"அப்படியானால் நீங்கள் தினமும் ஐம்பது முயல் குட்டிகளையாவது கொன்று விடுகிறீர்களோ!" என்று அவள் கேட்டாள். அவளுடைய வார்த்தைகளில் துன்பமும் எல்லையற்ற அனுதாபமும் இருந்தன.

"இதென்ன பைத்தியக்காரக் கேள்வி! முயல் குட்டிகளின் எண்ணிக்கை அன்றைக்கு ஏற்படுகிற அவசியத்தை, ஆராய்ச்சியின் மும்முரத்தைப் பொறுத்தது" என்றார் டாக்டர். அந்தக் குரலில் துன்பம் இல்லை. அறிவின் தாகம் இருந்தது. அதற்கு எல்லை ஏது! ஆராய்ச்சியின் தேட்டம் இருந்தது. அதற்கு ஓய்வு ஏது! அது கரை காணாக் கடல் அல்லவா!

டாக்டரின் மனைவி வேதனையோடு சொன்னாள்: "என்ன அநியாயப் பாபம் இது. அந்த ஜீவன்களுக்கு வாயில்லை. கேள்வி கேட்பார் கிடையாது. உங்கள் பாடு கொண்டாட்டம்தான்!"

ஒரு மனிதன் உயிர் வாழ வேண்டுமானால் அதன் பொருட்டு எத்தனையோ வாயில்லா ஜீவன்கள் பலியாக வேண்டும் என்ற தர்மம், அனாதி கால



மாகத் தன்னுடைய பகுத்தறிவின் ஆதிக்கத்தினால் மனிதனே வகுத்து வழங்குகிற மனித தர்மம், அவளுக்குப் பிடிபடவில்லை. இதயம் நடுங்கியது.

"ஒரு டாக்டரின் மனைவி இவ்வளவு பைத்தியக்காரியாக இருக்கிறாளே என்று எனக்கே அவமானமாக இருக்கிறது. நாலுபேர் கேட்டால் சிரிக்கப் போகிறார்கள்" என்று பேச்சை முடித்து விட்டு, தம்முடைய மத்தியான உணவை இரவு ஒன்பது மணிக்கு மேலே சாப்பிட உட்கார்ந்தார் அந்த ஆராய்ச்சி யோகி டாக்டர் வைத்தியநாதன்.

* * *

அன்றிரவு டாக்டரின் மனைவி உறங்கவில்லை. டாக்டரும் உறங்கவில்லைதான். இரண்டு பேரையுமே முயல் பிடித்துக் கொண்டது. ஆனால் ஒரு வித்தியாசம். டாக்டர் விஷயத்தில் முயல் பிடித்தது அவருடைய அறிவை. மனைவியின் விஷயத்திலோ அவளுடைய இதயத்தை.

காலை ஐந்தரை மணிக்கெல்லாம் விழித்து, அதாவது படுக்கையை விட்டு எழுந்து, டாக்டர் அவசரம் அவசரமாகக் குளித்தார். அதற்கு முன்னாலேயே எழுந்து மனைவி அவருக்கு வெந்நீர் எடுத்து வைத்திருந்தாள். குளித்ததும், ஒரு தோசையைப் பிட்டுப் போட்டு ஒரு டம்ளர் காப்பியையும் சூட்டோடு சூடாக ஊற்றிக் கொண்டு, 'விறு விறு' என்று புறப்பட்டு விட்டார். மனம் எல்லாம் ஆராய்ச்சி நிலையத்தில், முயல் குட்டியின் இதயத்திலே போய்ச் சிக்கியிருந்தது.

டாக்டரின் மனைவிக்கோ ஒரு துண்டுத் தோசை கூட இறங்கவில்லை. அவளுடைய உள்ளத்தையும் உடம்பையுமே முயல் உட்கொண்டிருந்தது.

இரவு எட்டு மணியிருக்கும். வேலைக்காரன் வந்து டாக்டர் நிலையத்திலேயே தங்கி விடுவதாகச் சொல்லி இரவுச் சாப்பாட்டை வாங்கிக் கொண்டு போய் விட்டான். அவள் ஒன்பது மணிக்கே வீட்டைப் பூட்டிப் படுத்துக் கொண்டு விட்டாள்.

அந்தப் பெரிய பங்களாவில் அவளையும் வேலைக்காரியையும் தவிர வேறு ஒரு காகம் கிடையாது. படுத்தால் உறக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு முனகினாள். நீண்ட நேரத்துக்குப் பிறகு சோர்ந்து போய்ச் சற்றுக் கண்களை மூடினாள்.

ஒரு பயங்கரமான கனவு:

முயல் குட்டிகள் அணி அணியாகப் படையெடுத்து வருகின்றன. தூய வெள்ளை நிறம். ஆனால் வாலெல்லாம் ஒரே அடர்த்தியாகச் சிலிர்த்து நிற்கிறது. முகம் கள்ளம் கபடம் இல்லாத முயலின் பால் வடியும் முகந்தான். ஆனால் அந்தக் கண்கள்! சுண்ணாம்புக் காளவாயில்கள் மாதிரி பயங்கரமாக அனல் வீசி எரிகின்றன. முயல் குட்டிகளா அவை! ஊளை விடுகின்றனவே!

எங்கோ ஒரு கடலும் கரையுமாகத் தெரிகிறது.

பொருட்டு எத்தனையோ வாயில்லா ஜீவன்கள் பலியாக வேண்டும் என்ற தர்மம், அனாதி கால



உடம்பையுமே முயல் உட்கொண்டிருந்தது.

இரவு எட்டு மணியிருக்கும். வேலைக்காரன் வந்து டாக்டர் நிலையத்திலேயே தங்கி விடுவதாகச் சொல்லி இரவுச் சாப்பாட்டை வாங்கிக் கொண்டு போய் விட்டான். அவள் ஒன்பது மணிக்கே வீட்டைப் பூட்டிப் படுத்துக் கொண்டு விட்டாள்.

அந்தப் பெரிய பங்களாவில் அவளையும் வேலைக்காரியையும் தவிர வேறு ஒரு காகம் கிடையாது. படுத்தால் உறக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு முனகினாள். நீண்ட நேரத்துக்குப் பிறகு சோர்ந்து போய்ச் சற்றுக் கண்களை மூடினாள்.

ஒரு பயங்கரமான கனவு:

முயல் குட்டிகள் அணி அணியாகப் படையெடுத்து வருகின்றன. தூய வெள்ளை நிறம்.

---



பம்பாய் டாக்டர் எம். வி. ராமன் அவர்களின் குமாரத்தி சௌ. சரோஜாவுக்கும், குவாலியர் புரொபஸர் ஸ்ரீ வி. ஆர். எஸ். ஐயரின் புத்திரன் செஞ்சீவி ராமகிருஷ்ணன் எம். ஏ., வுக்கும் மாதுங்காவில் சென்ற மாதம் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

---

நூறு, இருநூறு, ஆயிரம், பதினாயிரம். இப்பொழுது எண்ணவே முடியவில்லை. அந்த ஆராய்ச்சி நிலையத்துக்கு அருகிலே போனதும் ஒவ்வொன்றும் சுருண்டு விழுகிறது. உடனே மறு கணம் சுருண்டு விழும் ஒவ்வொன்றின் உடம்பிலிருந்தும் நூற்றுக் கணக்கான முயல் குட்டிகள் கிளைத்தெழுகின்றன. அவை அத்தனையும் பூதாகாரமாக அவளை நோக்கிக் கோபமாகப் பாய்ந்தே விட்டன. இதோ, இதோ!

"அம்மா! அம்மா!" என்று பதறிப் போய் டாக்டரின் மனைவி கூச்சல் போட்டதைக் கேட்டு, வேலைக்காரி படுக்கை அறைக்குள் ஓடி வந்தாள். கண்களைத் துடைத்துக் கொண்டே வெறிக்க வெறிக்கப் பார்த்தாள் அவள்.

* * *

காலை பதினொரு மணிக்கு வீட்டுக்கு வந்தார் நாதன். மனைவியின் கண்களைப் பார்த்து விட்டு என்ன வென்று கேட்டார். 'ஒன்றுமில்லை' என்று சொல்லியவாறு குளிப்பதற்காக அவருக்கு வெந்நீர் விளாவினாள் அவள்.

அதன் பின்னர் தொடர்ச்சியாகப் பல இரவுகள் டாக்டர் ஆராய்ச்சி நிலையத்திலேயே தங்கினார். அவருடைய மனைவியோ அந்த இரவுகளில் எல்லாம் முயல் என்ற ரூபத்தில் வந்த ஒரு பயங்கரமான கனவுப் பைசாசத்தின் ஆட்ட பாட்டங்களில் திக்கு முக்காடினாள். "ஒரு டாக்டரின் மனைவி இவ்வளவு பைத்தியக்காரியாக இருக்கிறாளே என்று எனக்கே அவமானமாக இருக்கிறது" என்று அவர் சொன்னாரல்லவா! அந்த அவமானத்தைத் தன் கணவனுக்கு ஏற்படுத்த அவள் விரும்பவில்லை. தான் கண்ட கோரக் கனவுகளைப் பற்றிப் பாவம், அவள் வாய் திறக்காமலே இருந்தாள். டாக்டரோ தம் மனைவியின் உடல் சீலை மாறுதலைக் கொஞ்சமும் கவனித்ததாகத் தெரியவில்லை. அவருக்குச் சதா சர்வகாலமும் ஆராய்ச்சி நிலையத்திலே வாசம்; வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார். அவ்வளவுதான், அவருடைய கண்களுக்கு வேறு எதுவும் தோன்றுவதில்லை. உலகம் என்பது இப்பொழுது ஒரு முயல் குட்டியின் வடிவில் அவருடைய ஆராய்ச்சிக் கத்தியை எதிர் நோக்கிக் கண்ணாடிப் பாத்திரத்திலே அடைபட்டுக் கண் மூடிக் கிடந்தது.

ஒரு நாள், கையில் தந்தியுடன் ஓட்டமும் நடையுமாக வீட்டுக்குள்ளே நுழைந்தார் வைத்தியநாதன். அவருடைய ஆராய்ச்சியை ஒப்பிட்டுப் பார்த்த கல்கத்தா நிலையம் அந்த முறையை அங்கீகரித்து அவரை உடனே புறப்பட்டு வரும்படி செய்தி அனுப்பியிருந்தது. வீட்டுக்குத் திரும்பி வந்தாரலோ!

மனைவி படுக்கையில் படுத்திருந்தாள். டாக்டருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆனால் இவரைக் கண்டதுமோ ஒன்றும் இல்லாதவள் போல் அவள் படுக்கையை விட்டு எழுந்திருக்க முயன்றாள். ஆனால் உடம்பு இடங் கொடுக்கவில்லை.

"உனக்கு என்ன உடம்பு!" என்று கேட்டார் டாக்டர் வைத்தியநாதன்.

"ஒன்றுமில்லை; கொஞ்சம் தலையை வலித்தது" என்று சொல்லிக் கொண்டே, மன வைராக்கியத்தினால் ஏற்படுகிற வலிமையில் அவள் எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.

* * *

டாக்டர் வைத்தியநாதன் கல்கத்தாவுக்குப் புறப்பட்டபொழுது, தம்முடைய டாக்டர் — நண்பர் ஒருவரை, மனைவியின் உடம்பைக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டுப் பிரயாணமானார். அந்த யாத்திரை வெற்றிகரமாக முடிந்தது. வைத்திய உலகிலேயே ஒரு புரட்சியை ஏற்படுத்தியது. இதய நோயின் ஆணி வேரையே கெல்லி எடுத்து விட்டார் என்று அவரைப் பாராட்டி ஒரு விருந்துபசாரம் நடத்தினார்கள். அந்த நேரத்திலேதான் ஊரிலிருந்து அவருக்குத் தந்தியும் வந்தது.

அன்று மறுதினம் வெளியான செய்தித் தாள்களில் "இதய நோய் மறைகிறது!" என்ற தலைப்பில் டாக்டர் வைத்திய நாதனைப் பாராட்டியிருந்தார்கள். அவருக்கு "வைத்திய உலகின் கலங்கரை விளக்கம்" என்று பட்டம் சூட்டித் தலையங்கமும் எழுதியிருந்தார்கள். அதே நாளில் மற்றொரு கோடியில், மாகாணச் செய்திகளோடு சேர்த்து, டாக்டர் வைத்தியநாதனுடைய மனைவி இதய நோயின் காரணமாக மரணம் அடைந்த விவரமும் வெளியாகியிருந்தது.

* * *

நமது ஆராய்ச்சி நிலையத்தை அடுத்த கடலின் கரையிலே டாக்டர் வைத்தியநாதன் நடந்தார். அலைமேல் அலையாக எவ்விப் பெருகும் உயிர் வெள்ளத்திலே, நில மகளின் இதயக் கொந்தளிப்பாக அந்தத் திரை கடல் பொங்கிப் பொங்கிக் கரையிலே வந்து சரிந்து குமுறியது. பல காத தூரங்களுக்கு அப்பால் அந்தக் கடலின் அலைகளிலே திசை தெரியாமல் விம்மிக் குமைகிற கப்பல்களுக்கு வழியைக் காட்டி ஒளி கொடுக்கும் கலங்கரை விளக்கம் மணற்பரப்பிலே ஒரே சூன்யமான ஏகாந்த வெளியில் நின்று கொண்டிருந்தது. அதன் படிக்கட்டிலோ கன்னங் கரிய காரிருள் கப்பிப் படர்ந்து பரந்திருந்தது. தாங்க முடியாத துயர இருள் சூழ்ந்தவராய் அந்த ஒளி நிலையத்தின் இருண்ட படிக்கட்டிலே உட்கார்ந்து பெருமூச்சு விட்டார், வைத்திய உலகின் கலங்கரை விளக்கம் டாக்டர் வைத்தியநாதன்.

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

# நாள் முழுவதும்

காலை வேளையில்



# புத்துணர்ச்சி

பிற்பகலில்



# அளிக்க...

இரவில்





குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு சேர்த்தியான இராஸ்மிக் பௌடர்கள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ணங்களிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

இராஸ்மிக் கம்., லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை HBP 8-X30TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*



# உங்கள் குழந்தைகள் கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?

**கிப்ஸ் உபயோகிக்கும் குழந்தைகள் அதன் ருசியை விரும்புகிறார்கள் –**

மகிழ்ச்சி தரும் மணத்தை ரசிக்கிறார்கள்!



**பெற்றோர்கள் அதன் விலையை விரும்புகிறார்கள் –**

அது மிகவும் குறைந்த விலையில் கிடைக்கிறது.



அழகான

- நீலம்,
- சிவப்பு,
- பச்சை

டப்பிகளில்

**எல்லோரும் கிப்ஸ் தரும் வெண்மையை மெச்சுகிறார்கள் –**

அது பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது. ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கிறது!






## கிப்ஸ் டென்டிபிரிஸ்

**பற்களுக்கு சீரிய குணமளிக்கிறது—குறைந்த செலவில்!**

GD. 34-50 TM